# கந்தரநுபூதி






கதிர்காம யாத்திரிகர் தொண்டர் சபை
கொழும்பு.

உ
சிவமயம்

அருணகிரிநாத சுவாமிகள்
அருளிய

# கந்தரநுபூதி

●

கதிர்காம யாத்திரீகர் தொண்டர் சபை கொழும்பு

திருத்திய இரண்டாம் பதிப்பு

இலவச வெளியீடு

பதிப்பு :
நியூ லீலா அச்சகம்
" சின்னத்துரை கட்டிடம் "
182 மெசஞ்சர் வீதி,
கொழும்பு - 12.

வளநிலவு குலஅமரர் பதியாய் நீல
மயிலேறி வரும் ஈசன் அருள்ஞான மதலே
அளவில்பல கலேஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்
விற லெண்ணு

உளமருவு சூரனுரம் எனதிடும்பை ஓங்கல்
ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலேகள் கலந்த
கந்தன்மல ரடியிணேகள் சிந்தைசெய்வாம்.

– சிவப்பிரகாசம் 4



# முகவுரை

முருகன் அருள் பெற்றவர்கள், தம் இலக்கியங்களால் நம்மை முருகன் திருவடிக்கு ஆளாக்குவதால் அவர்களே நல்லாசிரியர்கள். அவர்களில் அருணகிரிநாதர் முதன்மையானவர். இவர் கி. பி. 1450-ல் திருவண்ணமலேயிலே ஆட்சிபுரிந்த பிரபுட தேவராயர் காலத்தில் அங்கு வாழ்ந்தார். இளமைப் பருவத்தில் வறுமையும் பிணியும் அடைந்து துன்புறும்போது முருகக் கடவுள் குரு வடிவம் கொண்டு தோன்றி மௌன உபதேசம் செய்து அருளினர். இறைவன் திருவடிகளே அடைந்து, அதனல் பெற்ற இன்பத்தைப் பல்லோரும் அடையுமாறு தமிழ்நாடு எங்கும் சென்று, முருகக் கடவுளின் புகழ் பாடினர்.

அவர் பாடிய திருப்புகழ் தமிழர் வாழும் இடமெல்லாம் பரவி முருக பக்தியை மேன்மேலும் வளர்த்து வருகிறது. சுவாமிகள் அருளிய திருப்புகழ்ப் பாசுரங்களின் தொகை பதினுயிரம் என்ப. தற்காலத்தில் கிடைத்தவை 1231 பாசுரங்களே! அந்த நூலேயன்றி அருணகிரிநாதப் பெருமான் அருளிய கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி, திருவகுப்பு என்னும் நூல்கள் பாராயண நூல்களாக மேற்கொள்வதற்கு உரியவை.

இன்னுமொரு புகழ்மாலே பாடல்வேண்டும் என்று முருகனிடம் வேண்டிக்கொள்கிருர் :-

“ஆசை கூர் பத்தனேன் மனே பத்ம மானபூ வைத்து நடுவே அன்
பான நூலிட்டு நாவிலே சித்ர மாகவே கட்டி ஒருஞான
வாசம்வீசிப் பிர காசியா நிற்ப மாலேலோர் பத்த அளி பாட
மாத்ருகா புஷ்ப மாலே கோலப்ர வாள பாதத்தில் அணிவோனே”

இந்த வேண்டுகோளின்படி “கந்தரநுபூதி” என்ற பெயரோடு ஐம்பத்தொரு மலர்களே உடைய பாமாலேயைப் பாடிக் கந்தவேளுக்குச் சாத்தினுர்.

அருணகிரிநாதர் நம்மைப் போலவே வாழ்ந்து, நாம் படும் துன்பத்தைக் கண்டு இரங்கித் தாமே படுவதாக நினேத்து இறைவனிடம் முறையிடுகிருர். அடிகள் சம்பந்தாண்டார் என்றவரோடு வாக்கு

வாதம் உண்டானபோது, தேவலோகத்தில் மலரும் பாரிசாத மலரைக் கொண்டுவருவதற்காகத் தன் உடலைக் கோபுரத்துள் கிடக்கவிட்டு ஒரு கிளி உரு எடுத்துத் தேவலோகம் சென்றார். திரும்பி வருமுன் அவர் உடலைத் தகனம் செய்துவிட்டனர் என்றும், அதன்பின் கிளி வடிவமாக முருகக் கடவுள் திருவடியில் அமர்ந்து கந்தரநுபூதி பாடினார் என்றுங் கூறுவர்.

"கந்தரநுபூதி ஒரு மந்திர மாலை. இந்த அற்புத அலங்கார கவியை அன்பால் கற்றல் அறிவுடையார் கடன்."

கதிர்காம யாத்திரீகர் தொண்டர் சபையின் ஆதரவிலே சில நாட்களுக்கு முன் புலவர் கருணாலய பாண்டியனார் அவர்கள் சமய வகுப்புக்கள் நடத்தினார், அவ்வகுப்பு நேரத்தில் கந்தரநுபூதிப் பாடல்களுக்குப் புலவர் அவர்கள் உரைத்த கருத்துரைகளை அடியார் களுக்குப் பயன் படக் கூடும் என்று சில குறிப்புக்களுடன் கதிர்காம யாத்திரீகர் தொண்டர் சபை இந்தப் பதிப்பை வெளியிடுகின்றது.

கதிர்காம யாத்திரீகர் தொண்டர் சபை கொழும்பு.

3, கோயில் வீதி,
கப்பித்தாவத்தை,
கொழும்பு – 10.
18.7.'83

தொகுத்தவர் :
இரா. சபாநாயகம்

# கந்தரநுபூதி

காப்பு

( கலிவிருத்தம் )

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்.

We adore the lotus Feet of Lord Vinayaka to compose, in poetic perfection, this worthy garland of choice words to melt our stubborn stony hearts, to adorn and evoke the spontaneous Grace Lord Shunmugha !

சொற்பிரிவு :- நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்து உருக, தஞ்சத்து அருள் சண்முகனுக்கு இயல்சேர் செஞ்சொல் புனைமாலை சிறந்திடவே, பஞ்சக்கர ஆனை பதம் பணிவாம்.

பொழிப்புரை :- மனமான பாரக்கல்லும் இளகி உருகும்படி எளிதாக எதிர்ப்பட்டு அருளிய ஆறுமுகப்பெருமான் அணி தற்கு இயற்றமிழைச் சேர்ந்த செவ்விய சொற்களாகிய நறுமலர்களால் அழகு படத் தொடுக்கும் பாமாலை சிறப் புற்று நன்கு நிறைவேறுதற் பொருட்டு, ஐந்து கையினை யுடைய யானைமுகக் கடவுள் திருவடிகளைத் தொழுவோம்.

நெஞ்சக் கனகல் :- கற்போன்று கடினமான உள்ளம். உருகாத உள்ளமும் உருகும்படி எளிதாக வந்து அருள் செய்பவன்.

நெகிழ்ந்து :- இளகி

"கல்லை மென்கனியாக்கும் விச்சைகொண்டு
என்னை நின் கழற்கு அன்பனாக்கினாய்" (திருச்சதகம் 94)

தஞ்சத்து அருள் சண்முகன் :- தன்னைச் சரணாகதியென்று துதிப்போர்க்கு அருள்புரியும் ஆறுமுகப்பெருமான் எனவும் பொருள்படும்.

" புகலிடம் பிரிதும் உண்டோ "

செஞ் சொல் :- செவ்விய சொற்கள்.

மாலை :- பாமாலை.

பஞ்சாக்கர யானை :- விநாயகப் பெருமான் ஐந்து கரங்களையுடையவர். பிள்ளையார் என்றும் அழைக்கப்படுவர். இக்காலத்தில் நாம் கணபதியைப் பிள்ளையார் என்று குறிக்கிறோம். சிவ பெருமானுக்குப் பிள்ளையாயிருப்பதால் வந்த பெயர். இச் சொல் முற்காலத்தில் முருகனைக் குறித்து வழங்கியது.

" பிரணவப் பொருளாம் பெருந்தகை ஐங்கரன்
சரண அற்புதமலர் தலைக்கணிவோமே "





## நூல்

( செய்யுள் எல்லாம் துள்ளல் வண்ணம் )

1. ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.

May Thou, my Lord Muruga, brother of God Sri Vinayaka Who vanquished in battle the cruel elephant - faced Asura (Kayamuke) bless me with the sole and sacred task of singing the praise of the dancing Peacock (Thy celestial carrier) he mighty Vel (Thy unsurpassed weapon to destroy Evil) and the beautful Cock (of the glowing banner).

சொற்பிரிவு :- பரி ஆடும் வேல் ஆடும் அணி சேவல் ஆடும் எனப் பாடும் பணியே பணியாக அருள்வாய், தேடும் கயமா முகனை செருவில் சாடும் தனியானை சகோதரனே !

பொழிப்புரை :- தேவர்களிலே தன்னொடு போர் செய்ய வல்லாரைத் தேடித் திரிந்த யானை முக அசுரனைப் போரிலே தாக்கி வென்ற ஒப்பற்ற விநாயகப் பெருமானுக்கு உடன் பிறப்பாளனே ! மயில் உன்னைத் தாங்கித் தோகை விரித்து மகிழ்ந்தாடும் ; வேல் உன் கையில் இருந்து அவுணர்மேற் செல்வதற்குச் சுழன்றாடும் ; அழகிய கோழிச் சேவல் உன் கொடியில் இருந்து ஆடும் என்று பாடுகின்ற தொண்டே அடியேனது தொழிலாகும்படி செய்தருள்வாயாக.

பரி :- குதிரை, அது உவமை ஆகுபெயராகி மயிலைக் குறிக்கின்றது. காமனுக்குக் கிளியைக் குதிரை என்பர். வாகனம் எனப் பொருள்படும்.

தன் மேல் ஏறியிருந்த பொழுது, தோகைவிரித்து ஆட்டமாடி வருகின்ற குதிரையாகிய மயில் (அஃபரது பர ஞானம்.)

வேல் :- இது முருகனுக்கே உரிய ஆயுதம் - ஞான சக்தி. ஞானமே முருகன் திருக்கரத்தில் வேலாக இருக்கிறது. அந்த ஞான வேலினால் அஞ்ஞானம் தொலையும்.

" சுற்றிநில்லாதே போ! பகையே
துள்ளி வருகுது வேல் " - பாரதி

சேவல் :- கொடிக் கோழிச் சேவல் : ( அன்பரது அபரஞானம் )

" படைபட்ட வேலவன் பால் வந்த வாகைப் பதாகை என்னும்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதி கிழிந்து
உடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே ';

அலங். 12

" என்றிவை குமரி செப்ப வெம்பிரா னருளாற் பாங்கர்
நின்றதோர் கொடிமான் சேவ னிமிர்ந்தெழுந் தார்ப்புக் கொள்ளக்
குற்றவர் முதல்வன் தானும் குமரருந் தமரும் யாரும்
பொன்றினராகி மாண்டு பொள்ளெனப் புவியில் வீழ்ந்தார் "

- கந்தபுராணம் வள்ளி 184

பணியாக :- ஈறுகுறைந்து நின்றது.

பாடும் பணி :- ஆடும் பரியையும், ஞான வேலையும், அணிசேவலை யும் புகழ்ந்து பாடும் தொண்டினைத் தனக்குத் தொழிலாகத் தரவேண்டும் என்று வரம் கேட்கிறார். இறைபணி வழுவாது நிற்க.

" நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை "

– திருக்கோத்தும்பி 12

" சிகராத்திரி கூறிட்ட வேலுஞ் செஞ் சேவலுஞ்
செந்தமிழாற் பகரார்வ மீ அலங். 52

( சிகரங்கள் உடைய கிரவுஞ்ச மலையைக் கூறுபடுத்திய வேற்படையையும் சிவந்த கோழிக் கொடியையும், செந்தமிழ்ப் பாக்களாற் புகழ்ந்து பாடற்குரிய விருப்பத்தைத் தந்தருள வேண்டும்.)



பணியா அருள்வாய் ;- பணித்தருள்வாயாக என்றும் பொருள்படும்.

தேடும் கயமாமுகன் :- கயமுக அசுரன் தவம் செய்து சாவா வரம் பெற்றுத் தேவர்களிலே தன்னொடு போர்புரிய வல்லாரைத் தேடிச் சென்று துன்புறுத்தினன். தேவர்களைக் கொண்டு தினம் ஆயிரம் தோப்புக் கரணம் போடுமாறு செய்வித்தான். அசுரன் கொடுமையைப் பொறுக்கமுடியாமல் அமரர்கள் தேவாதி தேவனிடம் முறையிட்டார்கள். சிவபெருமானின் ஆணையைக் கொண்டு விநாயகப்பெருமான் போர்க்களம் செல்ல, அசுரன் பெருச்சாளி உரு எடுத்துப் பெருமானை எதிர்த்தான். எம்பெருமான் கருணைகொண்டு அசுரனை அருள்வயப்படுத்திப் பெருச்சாளியைத் தன் வாகனமாகக் கொண்டார்.

அடியார்கள் இந்தத் திருவிளையாடலை நோக்கி விநாயகர் சந்நிதானத்தில் இன்றும் தோப்புக்கரணம் போடுவார்கள்.

செருவில் சாடும் :- போரில் தாக்கும்.

தனி :- ஒப்பற்றவராயும் அவருக்கு அவரே நிகராயும் தனிமையான மகிமை உடையவர்.

யானை சகோதரனே :- யானைமுகக் கடவுளுக்குச் சகோதரனே !
" தம்பி தனக்காக வனத்.........தணைவோனே "

- திருப்புகழ்

2. உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவிநோ தனுநீ யலையோ
எல்லா மறவென் னையிழந் தநலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே !

My Lordl Art Thou not the divine Ecstasy, Dispeller of grief and the Exponent of all kinds of Yogas in pleasant colloquy with the devotees?

May Thou! Muruga the Supreme, Chief of the Devas. cut asunder all my earthly ties (by destroying my Ego) and enlighten me on the benefits of self - effacement !

சொற்பிரிவு :-

உல்லாசம் நிராகுலம் யோகவிதம் சல்லாப விநோதனும் நீ அலேயோ எல்லாம் அற என்னை இழந்த நலம் சொல்லாய் முருகா சுரபூபதியே.

பொழிப்புரை ;- முருகா ! தேவர்களின் அரசே ! மகிழ்ச்சியையும் கவலை இல்லாமையையும் விளக்கும் யோகப் பயிற்சி வகையைப் பற்றிய உரையாடலைப் பொழுதுபோக்கு விளையாட்டாக உடையவனும் நீ அல்லவா ? அடியேனுக்குத் தத்துவங்களெல்லாங் கழிந்து என்னையும் யான் காணுதுகண்ட இன்பத்தை இன்ன தென்று சொல்வாயாக.

அவ்வின்பம் இன்னதென்று சொல்ல முடியாதது என்பது கருத்து.

உல்லாசம் : மகிழ்ச்சி

நிராகுலம் ; கவலை இல்லாமை, உல்லாசமும் நிராகுலமும் யோகத்துக்கு அடையாய் அதன் பயனுகும்.

சல்லாபம் : கலந்து உரையாடல்.

விநோதம் ; பொழுதுபோக்கு விளையாட்டு.

எல்லாம் அற : தத்துவச்சார்பெல்லாம் கழிந்துபோய்விட்டால் இறைவனோடு அத்துவிதம் என்னும் மெய்ப்புணர்ப்பு உண்டாகும்.

" ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
நன்றன்று தீதன்று நானென்று - நின்ற
நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
தலையன் றடியன்று தான் "

- திருக்களிற்றுப்படியார் 58

இழந்த நலம் : தத்துவச் சார்பு எல்லாம் கழிந்து உயிர் தன்னையும் இழந்துதிளைத்த இன்பம்.

" நாதமும் கடந்த வெளியிலே நீயும் நானுமாய் நிற்கு நாள் உளதோ " — பட்டினத்தார்

சொல்லாய் : சொல்வாயாக

பூபதி : தலைவன்



3. வானே புனல்பார் கனல்மா ருதமோ
ஞானே தயமோ நவில்நான் மறையோ
யானே மனமோ எனையாண் டவிடந்
தானே பொருளா வதுசண் முகனே !

Oh Lord Shunmuga! Make it known to me whether the Etenal Truth is monifest in the five elements (i e. Ether, Water Earth Fire and Air) or in the blooming divine Wisdom or in the four Vedas or in my Inner Self and the mind or in the sacred place of Thy Initiation to me ! (Thou art all pervading.)

சொற்பிரிவு : வானே ? புனலோ ? பாரோ ? கனலோ மாருதமோ ? ஞான உதயமோ ? நான்மறையோ ? யானே ? மனமோ ? எனை ஆண்ட இடந்தானே பொருள் ஆவது சண்முகனே ! நவில்.

பொழிப்புரை : சண்முகா, மெய்ப்பொருள் என்பது எது ? ஆகாய முதலிய ஐம்பெரும் பூதங்களுள் ஒன்றோ ? அவற்றால் உதயமாகின்ற அறிவோ ? அவ் அறிவை விரிக்கின்றதற்குக் கற்கப்படும் நான்கு வேதமோ ? அவ்வேதத்தைக் கற்று உணர்கின்ற ஆன்மாவாகிய நானே ? என் அறிவுக்குக் கருவியாகிய மனமோ ? நீ அடியேனைத் தாக்கி அடிமை கொண்டு நின்ற இடமோ ? அறியுமாறு அருள்புரிவாயாக.

ஓ : எதிர்மறை. பொருள் : உண்மை

(வான், புனல், பார், கனல், மாருதம் ஐந்தும் ஐம்பெரும் பூதம் என்பன.) புனலோ பாரோ கனலோ மாருதமோ என ஓகாரம் தனித்தனிச் சென்று கூடிப் பொருள்தந்து பொதுவாய் நின்றது.

1. " அங்கிங் கெனுதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது எது ?

2. " தன்னருள் வெளிக்குளே அகிலாண்டகோடி எல்லாம் தங்கும்படிக் கிச்சை வைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்தது எது ? "

3. " மனவாக்கினில் தட்டாமல் நின்றது எது ? "

4. சமயகோடிகள் எல்லாம் தம் தெய்வம் எம் தெய்வம் என்று எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கிடவும் நின்றது எது?

5. எங்கணும் பெருவழக்காய் யாதினும் வல்ல ஒரு சித்தாகி இன்பமாய் என்றைக்கும் உள்ளது எது?

6. மேல் கங்குல் பகலற நின்ற எல்லையுளது எது?

- தாயுமானவர்

"வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன்று அசரீரியன்று சரீரியன்றே"

- அலங். 9

"மைப் படிந்த கண்ணாளும் தானும் கச்சி மயானத்தான் வார்சடையான் என்னினல்லால்
ஒப்புடையனல்லன் ஒருவனல்லன் ஒருரனல்லன் ஒருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக் காணில் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே"

- அப்பர்

பரம்பொருளைச் சுட்டிக்காட்டிக் கூறமுடியாது.

சண்முகன்: ஆறுமுகன் என்பதன் வடமொழித் திருநாமம். ஆறுமுகமும் பன்னிரண்டு கைகளும் உடையவர். வலது கைகளில சக்தி பாணம், கட்கம் துவசம் கதை, அபயம், இவற்றையும் இடது கைகளில் வில், வச்சிரம் தாமரை, கேடகம் சூலம், வரதம் இவற்றையும் தாங்கியவர். மயில் வாகனத்தில் வீற்றிருப்பவர். சடாக்ஷரம்: சரவணபவ; நமோ குமாராய என்றுங் கூறுவர்.

ஆறு குணங்களும் முருகக் கடவுளுக்கு ஆறுதிரு முகங்களாகும்

"ஏவர் தம்பாலுமின்றி யெல்லைதீரமலர்க்குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்தென்ன"

- கந்தபுராணம் திருஅவதாரப் படலம் 94

பிரணவ மந்திரமாகிய ஓரெழுத்தும், பஞ்சாக்கரமாகிய ஐந்தெழுத்தும் ஆக, ஆறெழுத்துக்களும் முருகக் கடவுளுக்கு ஆறு முகங்களாயின வெனினுமாம்.



"முகத்திலொன்றதா வவ்வெழுத்துடைய தோர் முருகன்
நகைத்து முன்னெழுத்தினுக்குரை பொருளென"

கந்தபுராணம் அயனைச் சிறைபுரி படலம் 10

"ஓமெனப் படுங்குடிலையே யொப்பிலா முருகன்
மாமுகத்துளொன்று மவன் தன்மை யார்வகுப்பர்"

கந்தபுராணம் அவைபுகுபடலம் 134

ஆணை ஆண்ட இடம்: ஆணவம் அற்ற இடம்

நவில்: ஏவல் வியங்கோள்; சொல்வாயாக

4. வளைபட் டகைமா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே

My Lord! Thou forcibly cast Thy powerful Vel which (with lightning rapidity) pierced through the (Krownja) mountain the bulwark of Asura Kingdom) and also the breast of Surapadma who came with his kith and kin to wage war with Thee. While Thou art so powerful Is it meet that I, your devotee. should ruin myself in the bondage of my wife (bedecked with bangles) and Children?

சொற்பிரிவு: வளைபட்ட கைம் மாதொடு மக்கள் எனும் தளை பட்டு அழியத் தகுமோ, தகுமோ கிளை பட்டு எழு சூர் உரமும் கிரியும் தொளை பட்டு உருவத் தொடு வேலனே.

பொழிப்புரை: சுற்றத்தினர் அழிந்து போர்க்குப் புறப்பட்ட சூரபன்மனது மார்பும் கிரவுஞ்ச மலையும் தொளைத்து ஊடுருவிப் போகும்படி கைதொட்ட வேற்படையுடைய பெருமானே! மனைவிப் பற்றும் பிள்ளைப் பற்றுமாகிய விலங்குகளில் மாட்டப்பட்டு நான் அழிந்துபோனால் அது உன் திருவருட்குப் பொருந்துமோ? பொருந்தாது.

வளைபட்ட கை: வளையல் ஒலித்த கைகளையுடைய பெண், இங்கே மனைவியைக் குறித்தது.

" வளை கைக்கிலதெனில் அரும்பிய முலையினர்க்
கழகுண்டாகுமோ "

திருவிளையாடற் : புரா. வளையல் விற்ற படலம் 24

தளை : கட்டு, கைவிலங்கு கால்விலங்கு ; தளைபட்டு :- கட்டுக்களொடு கூடி.

கிளை : சுற்றம்

தருமோ : நான் துன்புற்றுக் கொண்டிருந்தால், அது நின் அருளுக்குப் பொருந்துமா ? பொருந்தவே பொருந்தாது. எனவே அப்பற்றுக்களை நீக்கி, என்னை நினக்கு அடியனுக்கி நின்திருவடியில் கூட்டி அடியேனை உய்வித்து அருளல் வேண்டும்.

மாது : அழகு ; பெண்ணைக் குறிக்கின்றது. மாதின்மேல் செய்யும் பற்றை மாதென்றும் மக்களின்மேல் செய்யும் பற்றை மக்களென்றும் கூறினர்,

சூர் : சூரபன்மன் ; ஆணவம்

சூரபன்மனுக்குக் குதிரை முகமும் மனித உடலும். அவன் முருகன் அருள் பெற்றுச் சேவலும் மயிலுமாக மாறினன்.

கிரி : கிரவுஞ்சமலை ; மாயை

மாயையை அழித்த பெருமான்! அடியேனை இல்லற வாழ்வில் பற்றுக்கொள்ளாமல் உன் மேற் பற்றுக்கொள்ளச் செய்தருள்.

வேலவன் : வேற்படையுடையவன். வெற்றியைத் தருகின்ற வேலைக் கையில் ஏந்தியமையால் வந்த பெயர்.

தளைபட்டு அழிய : விலங்குகளில் அடியேன் கட்டுண்டு அழிந்து போனுல்.

" வைத்த நிதிபெண்டீர் மக்கள் குலங்கல்வி என்னும்
பித்த உலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ

திருக்கோத்தும்பி 6



**5.** மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
அகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுள்நின் றுதயங் குவதே

My Lord! Thou art eminent in dispelling the gest Maya (Illusion) Thou hath taught me (with Thy Six Sacred Faces) the Eternal Truth. Yet. I am still struggling is in the quagmire of the World with attachment for home, apparel and women. I have failed to meditate on Thy six sacred faces constantly I beseech Thee to save me !

சொற்பிரிவு ; மகமாயை களைந்திடவல்ல பிரான் முகம் ஆறும் மொழிந்தும், அகம் ஆடை மடந்தையர் என்று அயரும் சகமாயையுள் நின்று தயங்குவது ஒழிந்திலனே.

பொழிப்புரை : பெரிய மாயையின் மயக்கத்தை நீக்கிவிடவல்ல முருகனுடைய ஆறு திருமுகங்களும் எனக்கு உறுதிப் பொருளைச் சொல்லி இருந்தும் நான் என் மயக்கத்தை விட்டு ஒழிந்தேனல்லனே. இன்னும் நான் மனை என்றும் ஆடை என்றும் அணிகலன் என்றும் காதல் பெண்டிர் என்றும் பற்றுச் செய்து மயங்கும் உலக மயக்கத்துள் இருந்து வருகிறேன்.

மகமாயை : மகாமாயை, உலக சிற்றின்ப வாழ்வு

" நித்தமாய் அருவாய் ஏக நிலையதாய் உலகத் திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்கோர்
சத்தியாய்ப் புவன போகந் தனு கரணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமுஞ்செய்யுமன்றே"

– சித்தியார்

முகமாறு : சிவபெருமானுடைய முகம் ஐந்தோடு அதோமுகம் ஒன்று.

' ஐந்து முகத்தோடு அதோ முகம் தந்து திருமுகங்கள் ஆறுகிச்
செந் தழற்கண் ஆறும், ஒரு முகமாய்த் தீப்பொறிஆறு உய்ப்ப"

- கந்தர் கலிவெண்பா

மொழிந்தும் : ஒரு திருமுகத்துக்கு ஆறுதிருமுகமும் அறிவித்து இருந்தும் மாயை விடுதற்கு அரிதாய் இருந்தது. மாயையின் வல்லமை கூறி அதனை வெல்லுதற்குரிய ஆறு முகவனது திருவருளின் சிறப்பைக் குறிப்பிடுகின்றுர்.

அகம் : மனை.

ஆடை : துணி ; பலவிதமான ஆபரணப் பொருள்கள். இங்கு) துறவிக்குரிய காவியுடை அல்லாதன.) செல்வத்தைக் குறிக்கும்.

மடந்தையர் : பெண்கள்.

6. திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா யெனவள் ளிபதம் பணியும்
தணியா வதிமோ கதயா பரனே

My Lord ! Thou beseecheth at the Feet of Thy beloved consort Sri valli (our Holy Mother). with unabated love and kindness, Her Mandate to fulfil. it with promptitude (One to Her unflinching devotion to Thee )

But, how can the Lotus of Thy feet bud on the dry rock of my heart?

சொற்பிரிவு : திணியான மனோசிலை மீது உனதாள் அணி ஆர் அரவிந்தம் அரும்புமோ ? பணியாய் என வள்ளி பதம் பணியும் தணியா அதிமோக தயாபரனே.

பொழிப்புரை : அடியேன் என்ன செய்யவேண்டும் என்பதைக் கட்டளை இடுவாயாக வென வள்ளி நாச்சியாருடைய அடிகளை வணங்குகின்ற குறையாத அதிக காதல் கொண்ட அருள் அண்ணலே! என் கல் நெஞ்சில் நின் திருவடிகளாகிய அழகு நிறையும் செந்தாமரை மலர் அரும்பி மலருமோ ?

மனோசிலை = மனம் + சிலை : மனமாகிய கல்.

திணி : இறுக்கமிக்கது, திண்ணியது

அணி : அழகு

ஆர் : நிறைந்த

அரவிந்தம் : தாமரை

தயாபரனே : கருணைமிக்கோனே ! ஓகாரம் எதிர்மறை.

திணியான மனோசிலை : இறைவன் கருணையை நோக்கத் தன் அன்பின்மையை அடிகள் கூறுகின்றார்.



" உள்ளந்தாள் நின்று உச்சி யளவும் நெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சும் கல்லாங்
கண்ணிணையும் மரமாம் தீவினையினேற்கே "

- திருச்சதகம் 21

கல்லில் தாமரை முளையாது. கல்மனத்தை அன்பால் உருக்கல் வேண்டும். அன்பிலா மனம் கருங்கல்.

" கல்லா நெஞ்சில் நில்லான் ஈசன்
சொல்லாதாரோ, டல்லோ நாமே " - சம்பந்தர்

உன : ஆறும் வேற்றுமைப் பன்மையுருபு. அரவிந்தமது அரும்புமோ ? எனச் சொன்மாறி நிற்கும்.

7. கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே

Oh, my mind! Listen to me to save yourself from disrress and ruin, Without concealing. help others in whatever way you can pray and think unceasingly of the lotus Feet of Lord Muruga and his brilliant Yel: burn out, with his Grace, your long tormenting woes and forsake all your vain selfish act. (Karma-both good and bad) which are the cause for our briths.

சொற்பிரிவு : மனனே கெடுவாய் கதிகேள், வடிவேல் இறைதாள் நினைவாய், கரவாது இடுவாய், நெடுவேதனை தூள் படவே சுடுவாய், வினையாவையும் விடுவாய், விடுவாய்.

பொழிப்புரை : மனமே ! நீ கெடுகின்றாய். கெடாமல் உய்யும் வழி கேள். நீ இல்லை என்று மறையாமல், இரப்பவர்களுக்குக் கொடு. கூர்மையுடைய வேலைத் தாங்கும் இறைவனது திருவடியை மறவாமல் தியானித்துக்கொள்வாயாக. (இவ்வாறு) செய்தால் நெடுங்காலமாகத் தொடர்ந்து வருகின்ற பிறவித் துன்பத்தைச் சாம்பற் பொடியாக எரித்துவிடுவாய். அத்துன்பங்களுக்குக் காரணமாகிய வினைகளை எல்லாம் நிச்சயமாக விட்டுவிடுவாய்.

கதி : உறுதிப்பேற்றை அடைவதற்குரிய வழி.

கரவாது இடுவாய் :

" வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி அறிஞர்க் என்றும்
நொய்யின் பிளவு அளவு எனும் பகிர் மின்கள்."
அலங். 18

கூர்மையும் ஒளியும் பொருந்திய வேற்படையையுடைய முருகக் கடவுளைத் துதித்து எந்நாளும் வறியோர்க்கு ஒரு நொய்யரிசியின் பாதியளவாயினும் பகிர்ந்து கொடுங்கள்.

" தருபிடி காவல ! சண்முகவா ! எனச் சாற்றி நித்தம்
இருபிடி சோறு கொண்டு, இட்டு உண்டு இரும்."
அலங். 57

அடிகள் " இட்டு " என்று சொல்லிவிட்டுப் பின்புதான் " உண்டு " என்கிறார்.

" ஐயம் இட்டுண் " என்று இடுதலை உண்ணுவதற்கு முன்னே வைத்து ஔவையாரும் சொல்கிறார்.

" எங்காயினும் வரும் ஏற்பவர்க்கு இட்டது " அலங் 59

இறை வழிபாடும் ஈகையும் என்னும் இரண்டறமும் இம்மை மறுமை வீடு பேறின்பங்களுக்குச் சிறந்த வாயில் என்பது இத்திருப்பாட்டில் பெறப்படும்.

" ஈதற்குச் செய்க பொருளை " – திரிகடுகம்

பூர்வ புண்ணியத்தின் பயனாக இப்பிறவியில் கிடைத்த செல்வம் என்று எண்ணித் தருமம் செய்யவேண்டும்.

" அன்போடு தானதர்மம் செய்ய முருகன் அருள்தானே
வந்து வெளிப்படும்." - அலங். 16

" பிறக்கும் பொழுது கொண்டுவந்ததில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொண்டுபோவதில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்தந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லுவேன் கச்சியேகம்பனே"
- பட்டினத்தார்



தான தர்மம் செய்யும் பொழுது ஒரு பயனை விரும்பிச் செய்வோர் சிறந்த பயனடையார்.

நெடு வேதனை : பிறவித் துன்பம்.

விடுவாய் விடுவாய் : அடுக்குத் துணிவு பற்றி வலியுறுத்துதற் குறிப்பின்மேல் வந்தது. எதிர்கால முன்னிலை யொருமை வினைமுற்று, முருகப்பிரானை நினைத்துத் தானதருமம் கொடுத்தால் பிறவித் துன்பம் முற்றும் நீங்கும்.

8. அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே.

Oh, Lord Kumaran! (the ever young) Son of Goddess Parvathi (daughter of the Himalayan Mountain King.) Thou destroyed the race of the Asuras (i. e Evil forces) who came to war with Thee. By teaching me the Eternal Truth. Thou hath destroyed my illusion and enabled me to discard all my attachments to my land, home and relatives.

சொற்பிரிவு : அமரும் பதிகேள் அகம் ஆம் எனும் இ பிமரம் கெட மெய்ப் பொருள் பேசிய ஆ குமரன் கிரிராச குமாரி மகன் சமரசம் பொருதானவ நாசகனே.

பொழிப்புரை : குமரன், மலையரசன் மகளாகிய பார்வதிக்கு மகன். போர் புரிந்த அவுணர்களை அளித்தவன். (மனம்)

விரும்பிய ஊர், சுற்றம், வாழுமனை முதலானவை நமக்கு நிலைத்து நின்று உதவும் என்று கருதும் இம் மயக்கம் இரண்டும் அழிந்து போகும்படி, அடியேனுக்கு உண்மைப் பொருளை உபதேசித்தவாறு எவ்வளவு வியக்கத்தக்கது.

அமரும் : விரும்பியுறையும்

பதி : ஊர்

கேள் : சுற்றம் – மனைவி, மக்கள், உறவினர்

அகம் : வாழு மனை

ஆம் : நிலைத்து நின்று உதவும்

இ : இந்த

பிமரம் : மயக்கம்; மயக்கத்தினால் உண்டாகும் பற்று. பிரமம் என்பதன் மரூஉ.

பேசிய ஆ : பேசிய வகை என்ன என்பது.

கிரிராச குமாரி : பர்வதராசன் புத்திரியாகிய பார்வதி அம்மையார்.

"மடமயில் மகிழ்வுற வானுடவர் கோவென
மலைமகள் உமைதரு வாழ்வே" — திருப்புகழ்

சமரசம் : போர்

தானவர் : தனு என்பவள் பிள்ளைகள்; அசுரர்.

நாசகன் : அழிப்பவன் – இருவகைப் பற்றையும் கெடுத்தற்கு உள்ளுறை.

9. மட்டூர் குழன்மங் கையர்மை யல்வலைப்
பட்டு சல்படும் பரிசென் றொழிவேன்
தட்டு டறவேல் சயிலத் தெறியும்
நிட்டு ரநிரா குலநிர்ப் பயனே.

Oh my Lord! Thou art enraged (at the Asuras) and Thou art griefless sad dauntest; Thou hath flung thy Vel which pierced clear through the mountain "Krownji"

Lo! When shall I shake off the temptation of lovely women, with sweet smeling flowers in their treses, in whose attractive net I am caught and swayed hither and thither in grief?

சொற்பிரிவு : மட்டு ஊர் குழல் மங்கையர் மையல் வலைப்பட்டு ஊசல் படும் பரிசு என்று ஒழிவேன். தட்டு ஊடு அற வேல் சைலத்து எறியும் நிட்டுர நிராகுல நிர்ப்பயனே.

பொழிப்புரை : இடையிலே தடை இல்லாதபடி வேலைக் கிரவுஞ்ச மலைமேல் விட்ட பொல்லாதவனே! கவலை அச்சம் இல்லாதவனே! பூத்தேன் வடியும் கூந்தலழகு உடைய பெண்களின் காம மயக்கமாகிய வலைக்குள் அகப்பட்டு, ஊசல் போல் அங்கும் இங்கும் அலைந்து தடுமாறி வருத்தும் தன்மை எப்பொழுது நீங்குவேன்.



மட்டு : தேன்; வாசனை

குழல் : கூந்தல். மட்டூர்குழல் மங்கையர் : பொது மகளிரைக் குறிக்கின்றது. இப்பாட்டில் காம மயக்கத்தின் தீமையும் அது கடவுள் அருள் உடையார்க்கு அல்லது நீங்காமையும் பெறப்பட்டன.

ஊசல் படும் பரிசு : அங்கும் இங்கும் ஊஞ்சல் ஆடுவதுபோல் அலைந்துகொண்டிருத்தல்.

தட்டு : தடை

ஊடு : இடை. தட்டு அற : மலைகளின் நடு இடம் தொளை அடைந்து அழிய.

சயிலம் : கிரவுஞ்ச மலை. மயக்கத்தை செய்யும் மாயை, சூரபன்மன் தம்பி தாரகன் என்ற அசுரன் தன் மாயையினால் மலை வடிவாகி அநேக தேவர்களையும் முனிவர்களையும் வருத்தினான். அகத்திய முனிவர் பொதிய மலைக்குச் செல்லும் போது, ஒரு மலையின் வழிகள் எல்லாம் முடிந்ததாகத் தோன்றின. போன வழி திரும்ப அங்கும் வழிகள் மறைந்து விட்டன. அகத்தியர் வழி காணுமல் மயக்கம்கொண்டார். இது தாரகனின் மாயை என்று அறிந்து "மலைவடிவாக இருப்பாய்" என்று சபித்தார்.

தேவர்கள் துன்பத்தை நீக்க முருகன் போர்க்களம் சென்றார். செல்லும் வழியில் கிரவுஞ்ச மலை எதிர்ப்பட்டது. தாரகன் அளவிலா வஞ்சகப் போரைச் செய்ய, அவை ஆறுமுகக் கடவுளின் ஞானப் போரின் முன் பயனற்றன. முருகன் ஞானசக்தியாகிய வேலை ஏவிக் கிரவுஞ்ச மலையைப் பிளந்து சிறைப்பட்ட வீரர்களை விடுவித்தார். தாரகனைக் கொன்றார்.

"கூர் அண்ணி இட்டு அணுவாகிக் கிரவுஞ்சம் குலைந்தது"
அலங். 3

நிட்டுர : பொல்லாதவனே.

முருகனை நிட்டூரனென்றது வியந்து புகழ்தற் குறிப்பில் வந்த பழிச்சொல்.

நிராகுல : கவலை இல்லாதவனே,

நிர்ப்பயனே : அச்சம் இல்லாதவனே
ஊசல் படும் பரிசு ஒழிதலாவது அமைதி நிலை பெறுதல்.

**10.** கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
நேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே.

My Lord with the garland of Kadamba flower! Surapadma was the deadly foe of the land of Indira who had vanquised the Asura Valour. Thou split with Thy powerful Vel the Mango tree into which Surapadma had transformed himself at the end of the battle. (When this tree was split into two, one half of it became Peacock and the other half became Cock, to derive Thy grace for ever by serving Thee as Thy divine carrier and banner. Oh! How boundless was Thy Grace even towards Thy foe!)

When Yama (God of Death) approaches me, riding on his black buffalo to take away my life, pray appear before me on the chariot of Thy lovely peacock (to confer Thy Grace and save me.)

சொற்பிரிவு : கார் மாமிசை காலன் வரின் கலபத்து ஏர் மாமிசை வந்து எதிரப்படுவாய், தார்மார்ப வலாரி தலாரி எனும் சூர்மா மடியத் தொடு வேலவனே !

பொழிப்புரை : மலர் மாலை அணிந்த மார்பழகுடையவனே ! இந்திரனது ஊராகிய அமராவதிக்குப் பகைவனாகிய சூர பன்மன் செத்தொழியும்படி கைதொட்ட வேற்படையை யுடைய முருகா ! அடியேனிடம், எமன் தன் ஊர்தியாகிய எருமை மாட்டின் மேல் வருவானாயின் அப்பொழுது நீ தோகையழகுடைய நின் மயில் ஊர்தியின்மேல் வந்து தோன்றி அருள்வாயாக.

இது முருகன்பால் அடிகள் செய்துகொள்ளும் வேண்டுகோள்.



கார்மா : எருமை

காலன் வரின் : கூற்றுவன் வந்தால் முருகன் அடியாரிடம் கூற்றுவன் வரான். ஆதலால் வரின் என்றார். எருமையின் மேல் காலன் பாசக்கயிறு கொண்டுவரும்போது என் அச்சம் தவிர்ந்திடுமாறு அருளல்வேண்டும் என்று ஓர் விண்ணப்பம் செய்கிறார்.

" கனைத்தெழும் பகடதுபிடர் மிசை வரு
கறுத்த வெஞ்சின மறலிதன் உழையினர்
கதித்தடர்ந்தெறி கயிறடு கதை கொடு பொருபோதே
கலக்கு றுஞ்செயல் ஒழிவற அறிவுறு
கருத்து நைந்தல மருபொழு தளவை கொள்
கணத்தில் என் பயமற மயில் முதுகினில் வருவாயே "
- திருப்புகழ்

பாதிமதிநதி போது மணிசடை...........................
கால னெனையணு காம லுன திரு
காலில் வழிபட அருள்வாயே - திருப்புகழ்

உசந்த மாறன் பதி மிகு கூடலி லுறைவோனே
உகந்த பாசக் கயிறோடு தூதுவர் நலியாதே
அசந்த போதென் துயர் கெட மாமயில் வரவேணும்
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமாளே
– திருப்புகழ்

கலபம் : மயிற்றோகை. கலாபம் என்னும் வட சொல் கலபம் எனக் குறுகிற்று.

வலாரி : வல + அரி. வலன் ஒரு அசுரன். அரி - பகைஞன்.

வலன் என்னும் அசுரனுக்குப் பகைஞன் இந்திரன் ஆதலின் வலாரி என்பது இந்திரனைக் குறித்தது.

தலாரி : தலம் – இடம். வலாரி தலம் - இந்திரனுடைய இடமாகிய தேவலோகம்.

சூர்மா : குதிரை முக அசுரன். அவன் மாமரமாய் நின்றபோது முருகன் அவனை வெட்டி எறிந்தார். இந்த அசுரன் சிவ

பூசை செய்து தான் இறந்தபின் தன் உடல் தன் உடல் நவமணிகளாகவேண்டும் என்று வரம் பெற்றவன்.

" கவிழ் இணர் மா முதல் தடித்த "

திருமுருகாற்றுப்படை 59 - 60

கடைவழிக்குத் துணையாயிருப்பது இறைவன் திருவடித் துணையாதலால் அதனையே போற்றல் வேண்டும் என்றார்.

11. கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோ கசிகா மணியே

My Lord with Thy Divine. Vel! Thou art the presiding Deity of the snake mountain. Seshachalam (Popularly) believed to be Tirupathi and by some to be Tiruchengode), Thou hath taught thy devotees the four modes of poetic composition (to praise Thee) and Thou art the peerless precious Gem in the diadem of Devaloka. Thou hath, as my beloved Guru, enlightened me on the Real Truth (of life) which will enable me to attain Thy Bliss without passing away (like the motley crowd) with the pangs of death amidst the heart-rending cries of my kinsfolk!

சொற்பிரிவு : கூகா என என் கிளை கூடி அழப் போகா வகை மெய்ப்பொருள் பேசிய ஆ - நாக அசல வேலவ நாலு கவித்தியாகா சுரலோக சிகாமணியே.

பொழிப்புரை : திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் வேலாயுதக் கடவுளே! நால்வகைப் பாவலர்களுக்கும் நன்கொடையளிக்கும் வள்ளலே! தேவலோகத்துக்குச் சிகாமணியாக விளங்கும் தலைவனே! கூகா என்று என் சுற்றத்தார் கதறிப் பதறி அழ அடியேன் இவ்வுடலைவிட்டுப் பிரிந்து போகா வண்ணம், எனக்கு நீ உண்மைப் பொருளை உபதேசித்த வாறு வியக்கத்தக்கது!

நாக அசலம் : திருச்செங்கோடு என்ற மிகப் பழைமையான தலம். பாடல் பெற்றது.

" மீண்டு செங் காட்டி லோர் சார் மேவி "

கந்தபுராணம் கஜமுகனுற்பத்திப் படலம் 264



காலனையும் காமனையும் காட்டு சிறுத் தொண்டர் தரும்
பாலனையும் கொன்ற பழிபோமோ - சீலமுடன்
நாட்டிலே வாழ்ந்திருக்கு நாதரே! நீர்திருச்செங்
காட்டிலே வந்திருந்தக் கால் - காளமேகப்புலவர்

அங்கு எழுந்தருளியுள்ள மூர்த்தி அர்த்தநாரீசுவரனென்னு, மாதிருக்கும் பாதியனாகிய கோலம். முருகனுடைய திருவுருவத்தில் வேலைத் தனியே சாத்தாமல் உருவத்தோடு சேர்த்தே அமைத்திருக்கிறார்கள். இந்த முருகனைக் குறித்து அருணகிரிநாதர் கந்தரலங்காரத்திலும் திருப்புகழிலும் பல பாடல்கள் பாடியிருக்கிறார். ஆதிசேஷன் அங்கே வந்து பூசித்தான் என்பார்கள். திருச்செங்குன்று: நாகமலை, அரவகிரி என்றும் சொல்வார்கள்.

நாலுகவி : ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் பாடும் நால் வகைப் பாவலர்.

கூகா : ஒலிக் குறிப்பு.

போகாவகை : உயிர் உடலைவிட்டு பிரியாவண்ணம்.

" ஐவர்க்கு இடம்பெறக் காலிரண் டோட்டி அதில் இரண்டு கைவைத்த வீடு குலையுமுன்னே வந்து காத்தருள்."

அலங். 23

" ......................கற்ற கல்வியும் போய்ப்
பைவரும் கேளும் பதியும் கதறப்பழகி நிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே "

அலங். 84

"தேகம் நீங்கும் என எண்ணிலோ நெஞ்சம் துடித்து அயருவன்"

.................................................................................

இந்த நாய்க்கும் ஒரு வழி தெரியப்பேரின்ப நிட்டையருள்வாய்"

— தாயுமானவர்

"தந்தையார் போயினார் தாயாரும் போயினார் தாமும்போவார்
கொத்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார்
கொண்டுபோவான்
எந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியா லேழை நெஞ்சே
யந்தணு ரூர்தொழு துய்யலா மையல்கொண் டஞ்சனெஞ்சே"

- சம்பந்தர்

சிகாமணி : முடிமணி.

சூரபன்மன் தேவலோகத்தைக் கைப்பற்றித் தேவர்களை சிறையில் அடைத்துப் பல கொடுமைகளைச்செய்தான். முருக வேள் தேவசேனாதிபதியாய் வந்து சூரசங்காரம் செய்து தேவரைச் சிறையின் மீட்டுத் தேவலோகத்தைத் தேவர்க ளுக்குத் தங்கள் உரிமையான கூறுகக் கொடுத்தான். ஆதலால் முருகனைத் தங்கள் தலைமேல் இருக்கும் முடிக்கு மணியாகவைத்து வணங்குவார்கள்.

12. செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே

My Lord ! Thou hath stolen (the heart of) Goddess Valli (our beloved Mother) born of the red deer. Thou art ever existing without birth and death. Thou hath taught me the Divine secret to avoid speech and to observe (blissful) silence (Mownam-in thought as in word.) But, I am yet to make out the full import of this profound divine teaching ;

சொற்பிரிவு : செம் மான் மகளை திருடும் திருடன் பெம்மான் முருகன் பிறவான் இறவான். சொல் அற சும்மா இரு என்றலுமே, அம் மா பொருள் ஒன்றும் அறிந்திலன்.

பொழிப்புரை : செம்மையாகிய குணமுடையவரும் பிறப்பும் இறப்பும் இல்லாதவருமாகிய முருகப்பெருமான், (அடியே னைப் பார்த்து "சும்மா இரு சொல் அற" என்று உபதேசித்த உடனே பொருள் ஒன்றையும் அறியாமல் நின்றேன்.

செம்மான் மகள் : செவ்விய மாலினுடைய மகள் என்றும், செந்நிறமாகிய மானுடைய மகள் என்றும், சிலேடையாலே, பொருள்படும். முருகனைப் பழிப்பதுபோலப் புகழ்தல் என் னும் அணி. (நிந்தாஸ்துதி.)

திருமாலின் மகள் சுந்தரவல்லி முருகப் பெருமானைச் சேரும் பொருட்டு, முன்பு சரவணத் தடாகத்தில் தவம் செய்துகொண்டு இருந்த காலத்தில் முருகப் பெருமான் :



"நீ மானிடப்பிறப்பு எடுத்து நம்பால் வருவாயாக" என்ற திருவருள் வாய்மையினுல், வள்ளி மலைச் சாரலின் கண் தவம் செய்து கொண்டு இருந்த சிவமுனிவர் அங்கே வந்த பிணை மான் ஒன்றை இச்சித்துப் பார்த்ததைமையால், சுந்தரவல்லி அம்மான் வயிற்றில் கருப்பமாகி உதித்தனர்.

"மானி டத்தின் வருமைந்தன் முந்து நீ
மானி டத்தின் வருகென்ற வாய்மையான்
மானி டத்தின் வயினடைந் தாண்மரு
மானி டத்தின் மாஞகுமம் மான்மகள்"

– கந்தபுராண வள்ளி திரு. 25

திருடும் திருடன் : உள்ளம் கவரும் கள்வன் என்றும் பொருள் படும். (பக்குவ ஆன்மாக்களை ஆட்கொள்வது.)

பெம்மான் : பெருமான்.

பிறவான் : இறைவன் ஒருவனே பிறவாப் பெற்றியன்.

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்"

சிலப்பதிகாரம் 5 இந்திர 166

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி"

– திருவெம்பாவை

இறவான் : 'ஈறிலாதவன் ஈசன் ஒருவனே'

"நான் பிறப்பற்றவன், அழிவற்றவன்
உயிர்களுக்கெல்லாம் ஈசன்"

பகவத்கீதை ஞான 6

சும்மா இரு : நால்வகை வாக்கும் (சூக்குமை, பைசந்தி, மத் திமை, வைகரி) கடந்துநின்று யாதொன்றும் செய்யாம லும், சொல்லாமலும், நினையாமலும், நுகராமலும், உண் ணாமலும், உறங்காமலும், விழியாமலும் மோன நிலையில் இருப்பாயாக.

சொல் அற : செயலும் அற நினைப்பும் அற என்றும் பொருள் விரித்தல் இசையெச்சம். மனம் வாக்குக் காயங்களின் செயலின்றி.

பொருள் ஒன்றும் அறிந்திலனே :

பிரபஞ்சத்தின் கண்ணே தனக்கு அந்நியமாகத் தோன்றும், மாயா காரியங்கள் அனைத்தும் தோன்றவில்லை என்பதாம். ஏகனாகி நிற்கும் நிலையில் மலவாசனையும் கன்மங்களின் வாசனையும் நீங்கும்.

'இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்

— திருப்பூவல்லி

அன்பருக்கு அன்பான மெய்யன் ஐயன்
ஆனந்த மோனன் அருட்குரு நாதன்
தன்பாதஞ் சென்னியில் வைத்தான்
என்னைத் தானறிந் தேன்மனந் தானிறந் தேனே

— தாயுமானவர்

13. முருகன் றனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே

My Lord! Thou art neither the Effect, ie. the tangtble World (with Form) nor the Cause. ie. the subtle Maya (without form), neither the Existing nor the Non-existing neither the darkness of the confounded Knowledge (of the mundane world) nor the light of the crystal clear Wisdom (of the enlightened souls.) Thou art Known, by Thy grace, only to those elevated souls who look up to Thee (but to no others) as their sole divine Guru! Others cannot know Thee!

சொற்பிரிவு : முருகன் தனிவேல் முனி நம்குரு என்று அருள் கொண் அறியார் அறியும் தரமோ? உருஅன்று, அரு அன்று. உளது அன்று, இலது அன்று, இருள் அன்று, ஒளி அன்று என நின்றது.



பொழிப்புரை : அது உருவப்பொருளும் அன்று, அருவப்பொருளும் அன்று, உள்பொருளும் அன்று, இல்பொருளும் அன்று, இருளும் அன்று, ஒளியும் அன்று, இவ்வாறு இதுவன்று இதுவன்றென்று எதிர்மறுத் துணர நின்ற பரசிவத்தை, முருகன் ஒப்பற்ற வேல் பிடித்த முனிவனாகிய நம் பரமாசாரியன் என்று தெளிந்து, அவனது திருவருள் பெற்று, அறியாதவர் தமது சிற்றறிவால் அறியப்படும் அளவில் உள்ளதோ! அப்பரம்பொருள்.

முனிநம்குரு : முருகப் பெருமான் முனிவனாகி வந்து முன்னின்று உணர்த்தினாலன்றி உண்மைப் பொருளை ஒருவரும் உணர்தலாகாது.

" அவன் அருளாலே அவன் தாள் வணங்கி "

சிவபுராணம் 18

உரு அன்று :-

" சிவன் அருஉருவும் அல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானு மல்லன்
தவமுத லியோக போகந் தரிப்பவன் அல்லன் தானே
இவைபெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா
இயல்பினானே "

— சித்தியார்

அன்றும் திருவுருவம் காணாதே யாட்பட்டேன்
இன்றும் திருவுருவம் காண்கிலேன் – என்றுதான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட் கென்னுரைப்பேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது.

— காரைக்கால் அம்மையார்

" அருவமும் உருவம் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாக "

- கந். திருஅவதாரப் படலம்

அருவம் அருஉருவம் உருவம் என்னும் மூவகைத் திருமேனிகளையுடைய பரம்பொருளாகிய முருகக் கடவுளை அவற்றின் வேறாகிய அறிவுத் திருமேனியில் வழிபடுவார் மெய்யறிஞர்.

இருள் : உயிர்களுக்கு உள்ள அறிவை மறைக்கும் அக இருள். அதனை நீக்குவதற்கு இறைவனது அருள் ஒளியாகிய

பேரொளிப் பிழம்பினைப் பெறுதல்வேண்டும். பிரமதேவனுக்கும் திருமாலுக்கும் அக்இருளால் நிகழ்ந்த போரின் இடையே, சிவபெருமான் ஒழிப்பிழம்பாய் வந்து நின்று அதன் அடிமுடி தேடி அறியாது நின்ற அவர்கட்குப் பின்னர் அந்த ஒளியின் நின்று அருள் புரிந்தார்.

தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்ன மிலான் எங்கள் பிரான். - திருவருட்பயன்

திருமால் பிரமன் காணுத நினது திருவடிக் கமலங்களைப் பொல்லேன் அறிய முடியுமோ ?

இருளன்று ஒளியன்று :-
"புறச் சமயத்தவர்க்கு இருளாய் அகச் சமயத்து ஒளியாய்"
– சிவப்பிரகாசம் பாயிரம் 7

புறச்சமயத்தார் வேதாகமங்களை நிந்திப்பவராகையால் சைவ சித்தாந்தத்தின் உண்மையைத் தெரிவித்தாலும் உணரமாட்டார். ஆகவே அவர்கள் இருளிலே கிடப்பர்.

"இருளாய வுள்ளத்தி னிருளை நீக்கி" - அப்ப

தனிவேல் :- ஞான சத்தியாகிய வேற்படை. அது தன்னை முருகன் செலுத்துவதனுல் மலத்தையும் மாயையும் நீக்க வல்லமை உடையது.

14 கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே யொழிவா யொழிவாய்
மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிச்செல் லுமவா வினையே.

Oh my Mind ! To attain salvation, hold fast to the Sacred Feet of our Lord who hath the brilliant dazzling Vel (radiating like the Sun) and give up (with a grim resolve) the (increasing) desires of your five senses (ie, the body, mouth, eye, nose and ear) !

சொற்பிரிவு: மனனே கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்று உய்வாய், மெய், விழி, நாசியொடும் செவிஆம் ஐ வாய் வழி செல்லும் அவாவினை ஒழிவாய்.



பொழிப்புரை : மனமே ! நீ மெய் வாய்கண் மூக்குச் செவியாகிய ஐம்பொறிகளின் வழியே செல்லும் ஐம்புல ஆசைகளை எல்லாம் விட்டு ஒழிப்பாயாக. (அவற்றை நீ விட்டு ஒழித்தால்) தன் கைக்கு வாய்த்த கதிர்வேலையுடைய முருகனது திருவடித்துணை பெற்றுப் பிறவிப் பெருங்கடலிலிருந்து தப்பிப் பேரின்பப் பெருவாழ்வை அடைவாய்.

கதிர் : ஒளி.

ஐவாய் வழிச்செல்லும் அவா : ஐம்பொறிகளால் வரும் ஆசை : மண்ணுசை, பொன்னுசை, பெண்ணுசை இந்த ஆசையில் உழன்றுகொண்டிருக்கிற மனத்தை இறைவன் அருள் ஒன்றினுலேதான் திருப்பமுடியும். ஐம்பொறி வழியாக உழலும் வரையில் இறைவனைக் காணமுடியாது. ஐம்புலன் ஒடுங்கினுல் மனம் ஒடுங்கும். மனம் ஒடுங்கினுல் துன்பம் நீங்கும். ஐவாய் : மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்.

கழல் பெற்று உய்வாய் : முருகன் திருவடி பெற்று நான் எனது என்ற அகங்காரமமகாரம் ஒடுக்கப்பெற்று உய்திபெறுவாய்

ஒழிவாய் ஒழிவாய் : முன்னிலை ஏவலொருமை ; வலியுறுத்துதற் பொருட்டு அடுக்கிக் கூறப்பட்டன.

கருவிகளை இறை திருவருளாலன்றி யாரும் அடக்க இயலாது.

15. முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவஎண் குணபஞ் சரனே.

My Lord, Thou art the Supreme Guru adored by Devas and human beings, the Embodiment of the eight divine qualities. Bless me with intense feelings of sincere divine devotion to melt my heart and to acquire knowledge by uttering (with heart and soul) Thy sacred names, Murugan (the ever young, all beautiful and all fragrant), Kumaran (the perpetual youth) and Kugan (the dweller of the cave of the heart.

சொற்பிரிவு : பொருபுங்கவரும் புவியும் பரவும் குருபுங்கவ எண்குண பஞ்சரனே ! முருகன் குமரன் குகன் என்று

மொழிந்து உருகும் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்.

பொழிப்புரை : அவுணரொடு போர் செய்கின்ற வானவரும் மண் உலகத்தில் உள்ளவர்களும் வணங்கி வாழ்த்துகின்ற பரமசாரியனே. எண்பெருங் குணங்களுக்கியைந்த திருமேனியுடையவனே! முருகன் என்றும் குமரன் என்றும் குகன் என்றும் நின் திருப்பெயர்களை அன்புடன் சொல்லி என் உள்ளம் உருகும் தன்மையைத் தந்து மெய்யுணர்வாகிய அநுபவ ஞான நிலையை எப்பொழுது கொடுத்தருள்வாய்?

முருகு : இளமை.

முருகன் : உயர்ந்த பண்புகள் யாவும் முருகு என்ற சொல்லால் வழங்கப்பெறும். முருகன் அப்பண்புகள் எல்லாவற்றையும் உடைய பரம்பொருள்.

இறைவனுடைய நெற்றிக் கண்ணினின்றும் தீப்பொறி ஆறாகப் பிறந்து உருக்கொண்டார் என்று கந்தபுராணம் கூறுகிறது.

“ஈசனே அவன் ஆடலால் மதலையாயினன் காண்
ஆசிலா அவன் ஆறுமுகத் துண்மையால் அறி நீ
பேசில் ஆங்கவன் பரனொடு பேதகம் அல்லன்
தேசுவா வகன் மணியிடைக் கதிர் வருதிறம்போல்

கந்தபுராண உற்பத்தி காண்டம்

குமரன் : சிவபெருமானுடைய ஞானசக்தி, ஆணவமல பந்தங்களை நீக்குபவன். காளைப்பருவம் உடையவன்.

ஒரு முகம் நான்கு கைகளும் உடையவர். வலக் கைகளில் சக்தியையும் கத்தியையும் இடக் கைகளில் குக்குடத்தையும் கேடகத்தையும் ஏந்தியவர்.

வள்ளி தேவியோடு கூடியவர். தாமரைப் பூமாலையைக் கழுத்தில் தரித்திருப்பவர்.

வள்ளியம்மையார் கரு நிறமுடையவர். வலது காலை நேராக ஊன்றி இடதுகாலை வளைத்து இருப்பார். இடக்கையில் தாமரைப் பூவைப் பிடித்துக்கொண்டு வலது கையைத் தொங்கவிட்டிருப்பார்.



குகன் : மனமென்னுங் குகைக்குள் இருப்பவன். ஒருமுகமும், மூன்று கண்ணும் நான்கு கையும் தலையில் இரத்தினக் கிரீடமும் உடையவர். வலது கைகளில் வச்சிரமும் சூலமும். இடது கைகளில் வதரமும் அபயம் தரித்தவர். இடது பாகத்தில் கிரியாசக்தியோடு காட்சி அளிப்பர்.

உணர்வு : அநுபவ ஞான நிலை.

பொருபுங்கவர் : போர் செய்கிற தேவர்.

புவி : எல்லா உலகத்தையும் உணர்த்தும்.

எண்குணம் :

அடியார்களைக் கைகொடுத்துத் தூக்குதல்.

கருணை கனிந்து காட்டுதல்.

அன்பில் அகப்படுதல்.

அடியார்களின் இச்சைபோல் ஆடுதல்

உள்ளத்தில் திருவிளையாடல் செய்து மகிழ்வித்தல்.

கருணை பொழிந்து பொறுமையாய் இருத்தல்.

எப்பொருளுமாயும் இருந்து திகழுதல்.

உயிர்களின் சுக துக்கங்களை தன்னுடையனவாகவே எண்ணி அவர்களுடைய யோகச் சேமங்களை அன்புடன் வகித்தல்.

குருபுங்கவன் : சிறந்த குரு.

பஞ்சரம் : கூடு, பறவைக்குக் கூடுபோல்வது உயிர்க்கு உடம்பு, தன் அன்பர்களுக்குப் பக்குவம் உணர்ந்து மெய்யுணர்வு தந்து வீடு அளித்தற்கு முருகன் ஞான ஆசிரியனுடைய யாக்கையைத் தான் எடுத்துக்கொண்டு எதிர்ப்படுவானாதலான் அவ்வுடம்பை அவற்றிற்குப் பஞ்சரமென்றார்.

16. பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா ! முதுசூர் படவே லெறியுஞ்
சூரா ! சுரலோ கதுரந் தரனே.

My Lord! Thou art the brave Hero who valiantly vanquished the old Asura. Thou art the protector of the realm of Devas I am seized with the disease of excessive worldly desires. unable to discern the Truth due to my evil acts. Is it just to make me wobble? (Pray Help me to ovecome my desires.)

சொற்பிரிவு : பேர் ஆசை எனும் பிணியிற் பிணிபட்டு ஓரா வினையேன் உழலத் தகுமோ ? வீரா முது சூர் படவேல் எறியும் சூரா சுரலோக துரந்தரனே.

பொழிப்புரை : வீரனே ! சூரபன்மனுடைய பழைய அரசுவடிவம் அழிய அவன் மேல் வேற்படை வீசவல்ல சூரனே ! தேவர் உலகத்தைப் பாதுகாக்கக் கடவோனே ! அடியேன் பெரிய ஆசையாகிய கட்டினிலே கட்டுண்டு கட்டறும்வழியே ஆரா யாமல் மேன்மேலும் பிறந்து இறந்து அலையலாமா ?

ஓராது : ஓரா எனக் குறைந்து நின்றது ஆராயாமல்.

ஆசை : "ஆசைக் கோர் அளவில்லை ஆகில மெல்லாம் கட்டி ஆளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைவர்"
- தாயுமானவர்

முது சூர் படவேல் எறியும் :

பழைய அசுரவடிவம் இருக்கும்வரை சூரன் நல்லொழுக்க நெறியில் செல்லுதல் இயலாதாயிற்று. ஆகவே அவ்வுடலை அழித்து அவனை நெறிப்படுத்தும் அருட்செயலை முருகன் ஆற்றினன். அவன் அருளால்தான் தன் அசுர யாக்கை அழிய மயில் வடிவையும் சேவல் உருவையும் சூரன் பெற்றான்.

உழலத் தகுமோ : வருந்தல் முறையோ.

சுரலோகம் : தேவர் உலகம்

துரந்தரன் : பாதுகாக்கக் கடவோன்

பேராசை என்கிற கட்டினில் கட்டுப்பட்டு அடியேன் இருக்கிறேன். தேவலோக பாரத்தைத் தாங்குபவரே ! உமக்கு இக்கட்டை அவித்து என்னை மீட்பது பெரியதோர் காரியமா ?



17. யாமோ தியகல் வியுமெம் மறிவும்
தாமே பெறவே லவர்தந் ததனுற்
பூமேன் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே னடவீர் நடவீ ரினியே.

My Lord Velavar hath by His Grace blessed us with lucid learning and wisdom (to praise and adore Him ) Let us therefore give up our glamour for worldly attachments and go ahead ( with rapid pace-not wasting our precious Time ) to acquire Righteousness and Divine Illumination by singing His praise always.

சொற்பிரிவு : பூமேல் மயல் போய் அற மெய் புணர்வீர் யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும் தாமே பெற வேலவர் தந்த தனால், நாம் ஏன் இனி நடவீர் நடவீர்.

பொழிப்புரை : யாம் கற்ற கல்வியும் எமது இயற்கை அறிவும் முருகப் பெருமான் தாமே நாம் பெற நமக்குக் கொடுத்துள்ளார். ஆதலால் அறிவுடையவர்களே ! உலகின்மேல் மயக்க உணர்வு கெட்டொழியவே உண்மைத் தன்மையைச் சென்று கூடுங்கள். பிறவித் துன்பங்கட்கு அச்சம் வேண்டா. உண்மையைக் கூடுதற்கு முருகன்பாற் செல்லுங்கள். இனி மேல் உடம்பெடுத்து உலகில் இயங்கமாட்டீர்.

யாம் ஓதிய கல்வி : "கல்வியால் ஆயபயன் கடவுளை வணங்குதல்" முருகனுக்குச் செய்யும் கவிகள் அலங்காரங்கள். ஆகவே "வேலன் கவியை அன்பால் எழுத்துப் பிழையறக் கற்றல் வேண்டும்."

முருகக் கடவுள்மீது பாடிய பாடல்களையன்றி மற்றைய இழிவான பாடல்களைப் படியாதிருக்கக்கடவீர்.

"கழியும்படி அடல்குன்று எறிந்தோன் கவிகேட்டு உருகி இழியும் கவி கற்றிடாது இருப்பீர்."

இறைவனை வாழ்த்திப் பாடுவதற்கே மானிடப் பிறவியை அடைந்திருக்கிறோம்.

" ஊனடைந்த உடம்பின் பிறவியே
தானடைந்த உறுதியைச் சாருமால்
தேனடைந்த மலர்ப் பொழில் தில்லையுள்
மாநடஞ் செய் வரதர் பொற்றாள் தொழ."
– சேக்கிழார்

பூ : உலகம்

நாம் ஏன். நாம் : அச்சம். பிறப்பிறப்புக் கட்கு அஞ்சுதல் எதற்கு ? அஞ்சுதல் வேண்டா.

நடவீர் இனி நடவீர் : அச்சத்தை விட்டு முருகனது திருவருளை நோக்கிச் செல்லுங்கள்; இனிமேல் உடம்பெடுத்து நடந்து திரியமாட்டீர் : பிறவாமையும் வியாபகமும் அடைவீர் என்றவாறு.

18. உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வநகா வபயா வமரா
வதிகா வலசூ ரபயங் கரனே.

My Lord ! Thou art the son of Lord Siva (Purity Divine) who is birthless and deathless, super - conscious, transcendental and inaccessible even to Brahma and Vishnu Thou art Great, Sinless and Fearless the Guardian Angel of Devaloka and Terror to Surapadma!

சொற்பிரிவு :

உதியா மரியா உணரா மறவா விதி மால் அறியா விமலன் புதல்வா அதிகா அநகா அபயா அமராவதிகாவல சூர பயங்கரனே !

பொழிப்புரை :

பிறப்பும் இறப்பும் இல்லாதவனே மறந்துணர்தலும் உணர்ந்து மறத்தலும் இல்லாதவனே ! நான் முகனும் நாரணனும் தேடிக் காணாத சிவபெருமானுக்குப் புத்திரனே ! எல்லோர்க்குமேலானவனே ! அடியார்கள் பாவம், பயம் அழிப்பவனே ! தேவலோகத்துக்குக் காவலனே ! சூரபன்ம னுக்கு அச்சத்தைக் கொடுத்தவனே !

உதியா மரியா உணரா மறவாப் புதல்வா என ஈறுகெட்ட நான்கு எதிர்மறைப் பெயரெச்சங்களும் அடுக்கிநின்று புதல்வா என்னும் ஒரு பெயர்கொண்டு முடிந்த அடைமொழியாயின.



உணரா மறவா : நினைப்பு மறப்புக்கள் இல்லாத.

விதிமால் அறியா : பிரமனும் விட்டுணுவும் அன்னமாகவும் பன்றியாகவும் இறைவனின் அடி முடிதேடி அறியமுடியாத. 'திருமாலும் பன்றியாய்ச் சென்று உணராத் திருவடியை'

– திருத்தெள்ளேணம் 1

பிரமதேவன் தக்கனுக்குச் செய்த உபதேசம் :

'அரியும் யானுமுன் றேடுவெவ் வனற்கிரி யனல
கிரியெனும்படி நின்றது.'
-கந்தபுராணம் அடிமுடி 96

( திருமாலும் யானும் முன்னர் அடியும் முடியுந் தேடா நின்ற அந்த அக்கினி மலையானது ; அருணாசலம் என்று புகழ்ந்து கூறும்படி விளக்கியது )

விமலன் புதல்வா : சிவபெருமான் மகனே - இவனும் சிவனைப் போலவே பேராற்றல் உடையவன். அப்பெருமான் முப்புராதியாரை எளிதாக வென்றது போன்றே முருகப்பெருமானும் சூரன் முதலிய அசுரரை விளையாட்டாய்ப் போர் புரிந்தே வென்றான்.

' ஆற்றைப் பணியை இதழியைத் தும்பையை அம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் மகன் கிருபாகரனே.'

அதிகன் : தலைவன், மேலானவன், முருகனிற் சிறந்தார் ஒருவரும் இலர். முருகனை மேலானவன் என்று மதியாத சூரன் பல இன்னல்களை அடைந்தான். பிரமன் சிறை சேர்ந்தான்.

" குட்டிச் சிறையிருத்தும் கோமானே " - குமரகுருபரர்

அநகன் : பாவம் இல்லாதவன்.

அமராவதி காவலன் : தேவலோகத்தின் தலைநகரை முருகன் பாதுகாத்து அருளினார்.

சூரபயங்கரனே :

"அவுணர் குடர் குழம்ப" அலங். 11

கிங்கிணி யோசை படத் திடுக்கிட்டு அரக்கர் - அலங். 13

சூரபதுமனுக்கு அளவு கடந்த ஆணவச் செருக்குண்டு. கந்தவேளை எளிய சிறுவனுக எண்ணினுன். தன் தந்திரம் பலியாத போதுதான் முருகன் விசுவரூபத்தைக் கண்டு தன் சிறுமையையும் முருகனின் பெருமையையும் உணர்ந்தான்.

"கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்ந்திலேன் யான்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றே."

என்று கூறி அஞ்சி நின்றுன்.

- கந்தபுராணம் சூரபன்மன் வதைப்படலம்

19. வடிவுந் தனமும் மனமுங் குணமும்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா அயில்வே லரசே
மிடியென் றொருபா விவெளிப் படினே.

Oh my Lord! Thou hath the Sharp Vel Thou art without beginning or end. It is amazing that when the sin called Poverty appears before me with is hideous face, all my beauty wealth, charitable mind and noble qualities - besides the worthy traits of my family and pedigree leave me in no time. (I want neither plenty which puffs up the Ego nor poverty which pulls down all my noble qualities. Pray save me from the clutches of both and keep me just above want, to enable me to have peace of mind to devote my thoughts on Thee)

சொற்பிரிவு : வடிவும் தனமும் மனமும் குணமும் குடியும் குலமும் குடிபோகிய ஆ அடி அந்தம் இலா அயில் வேல் அரசே மிடி என்று ஒரு பாவி வெளிப்படின்.

பொழிப்புரை : ஆதியும் அந்தமும் இல்லாத அரசே! கூர்வேல் ஏந்தும் அரசே! வறுமை என்று ஒரு பாவியானவன் ஒருவ



னுடைய வாழ்வில் தோன்றுவானேயாகில் அவனிடத்தில் உள்ள உடல் அழகும், செல்வமும் நல்மனமும், சிறந்த குணமாகிய நன் நடத்தையும் குடிப்பிறப்பின் உயர்வும், உயர்ந்த குலத்தில் பிறந்த பெரும் தன்மையும், அடியோடு ஒழிந்துபோவது என்ன ஆச்சரியம்!

அடி அந்தமிலா அரசெனவும், அயில் வேல் அரசெனவும் தனித்தனிக் கூட்டிப் பொருள் கொளல்வேண்டும்.

மிடி : வறுமை

"கொடிது கொடிது வறுமை கொடிது" - ஔவையார்

மிடி என்ற பாவி யார் வாழ்வில் தோன்றுவான் என்பதைப் பட்டினத்தடிகள் பின்வருமாறு சொல்லுகின்றுர் :-

"ஆற்றோடு தும்பை அணிந்தாடும் அம்பலவாணர் தமைப்
போற்றுதவர்க் கடையாளமுண்டே இந்தப் பூதலத்தில்
சோற்றுவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியுமற்றே
ஏற்றுலும் பிச்சை கிடையாமல் ஏக்கற்றிருப்பார்களே."

(சிவபிரானைப் போற்றுதவர்கட்கு இவ்வுலகத்தில் அடையாளம் உண்டு. அவர்கள் சோற்று வாசலையும் இடைக்கப் பெறுமல் இன்பம் அழிந்து, உடுக்க ஆடையும் ஒழிந்து இரந்தாலும் பிச்சை அகப்படாமல் தாழ்ந்த நிலை அடைந்திருப்பார்கள். இந்நிலையே அடையாளமாம்.)

முருகக்கடவுள் தம அடியவர் வேண்டியவற்றைக்கொடுத்தருளும் கடவுளாதலின் அவரடியவர் வறுமையினுல் வருந்தார்.

"முடியாப் பிறவிக் கடலில் புகார் முழுவதும் கெடுக்கும்
மிடியால் படியில் விதனப் படார். அலங். 33

கோற்றொடி! செல்வர்பாற் குறையி ரந்துநின்
றேற்றயின் றுயிர்சுமந் திருத்தல் ஈறிலா
ஆற்றலு மானமும் அறிவும் கல்வியும்
மாற்றருஞ் சீர்த்தியு மாற்றும் என்பவே - நைடதம்

பிறந்த குலமாயும், பேராண்மை மாயும்
சிறந்தங் கல்வியு மாயும்; — கறங்கருவி
கன்மேற் கழூஉங் கணமலை நன்னுட
இன்மை தழுவப்பட் டார்க்கு. - நாலடியார் 285

நலனும் இளமையும் நல்குரவின் கீழ்ச்சாம்.
நான்மணிக்கடிகை 83

20. அரிதா இயமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா வுபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே.

My Lord! Thou art protective like, vessel capable of crossing the ocean of birth valiant and invincible, held in high esteem and adored with great devotion by all and personified as ponevem (the basic mantra) by the Devas! Thou art the protector of Devaloka. How I wonder that to me, an underserving soul, Thou hath taught the rare Eternal Truth!

சொற்பிரிவு : அரிது ஆகிய மெய்ப்பொருளுக்கு அடியேன் உரிதாக உபதேசம் உணர்த்திய ஆ. விரி தராண விக்கிரம வேள் இமையோர் புரி தாரக நாகபுரந்தரனே.

பொழிப்புரை : அரும்பு மலர்ந்த வாகை மாலை யணியும் போர் வெற்றியுடைய செவ்வேளே ! தேவர்களின் ஊரை இடையூறு களைந்து தாங்குபவனே கிடைப்பதற்கு அரிதாகிய உண்மைப் பொருளுக்கு அடியேன் உரியவனாகும்படி நன்கு அறிவித்தவாறு என்ன வியப்பு.

ரணம் : போர் (வடசொல்) தார் ரணம் என்பன தாரண மென ரகர வொற்றுக் கெட்டுப் புணர்ந்தன. கம்பர் ராமாயணம் என்பன கம்பராமாயணம் என ரகர வொற்றுக் கெட்டுப் புணர்ந்து நின்றவாறுபோல.

தார் : வெற்றியடையாளமாகிய வாகை மாலை

புரி : ஊர்

நாகம் : தேவலோகம்

இமையோர் : தேவர். இதனை புரி : ஊர் என்பதற்கு முன் வைத்தல் வேண்டும்.

உரிது : உரிமை. உரியதாக உரிதா என நின்றது.

உணர்த்திய : அறிவித்த – ஆ : ஆறு :



அரிதா உபதேசம் :

" பரிவாக எனக்கு நீ அறிவிக்க வந்ததே
பரிபாக காலம் அலவோ " – தாயுமானவர்

" பார்விரிந்த நுலெல்லாம் பாதிவிருத்தத்தால்
சாதித்தார் பொன்னடியைச் சாருநாளென்றோ "
– தாயுமானவர்

கருணாகரராகிய முருகக் கடவுள் முத்தி பெறுவதற்குக் கருவியாகிய தவம் சிறிதுமில்லாத அடியேனை அருள் வழியில் விட்ட முறைமை என்ன வியப்பாயிருக்கின்றது.

21 கருதா மறவா நெறிகா ணெவெனக்
இருதாள் வனசந் தரவென் றிசைவாய்
வரதா ! முருகா ! மயில்வா கனனே
விரதா ! சுரசூ ரவிபா டணனே.

My Lord Muruga riding on the holy peacock! Thou art the Giver of all boons to Thy devotees. Thou hath vowed to protect them and to promote their welfare. Thou hath vanquished the Asura (Soorapadma) When shall it please Thee to bless me with Thy twin lotus Feet to attain 'Nirvikalpam' i.e. the super-conscious state of mind, devoid of the (mundane) thoughts and Thought-lessness?

சொற்பிரிவு : கருதா மறவா நெறி காண எனக்கு இருதாள் வனசம்தர என்று இசைவாய் வரதா முருகா மயில்வா கனனே விரதா சுர சூரவிபாடணனே.

பொழிப்புரை : முருகா ! வரத்தைத் தருபவனே ! மயிலை வாகனமாகக்கொண்டவனே ! விரதம் பூண்டு பலன் பெற்ற அசுரனாகிய சூரபன்மனைப் பிளந்தவா ! நினைப்பு மறப்பு அற்ற வழியை அனுபவிக்க அடியேனுக்கு உன் தாமரை போன்ற இரு பாதங்களைத் தருவதற்கு எப்போது திருவுள்ளம் கொள்வாய்.

கருதா மறவாத நெறி : முத்தி நெறி

காண : அனுபவிக்க

வனசம் : திருவடியாகிய தாமரையை

வரதன் : வரத்தைத் தருபவன்

விரத அசுரன் ; இனிமைப் பண்பு இல்லாத அசுரன் என்றும் பொருள்படும்.

" நீயான ஞான விநோதந் தனையெ று நீயருள்வாய் "
அலங். 46

என்று இசைவாய் :

" மாவடு வகிரன்ன கண்ணி பங்கா நின் மலரடிக்கே
கூவிடுவாய் " - அடைக்கலப்பத்து 8

மயில் : அன்பரது பரஞானம் வெற்றிவேலோன் வாகனம்.

" ........................................அவுணர் குடர் குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்து
அசைபடு கால்பட்டு அசைந்தது மேரு அடியிட எண்
திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே "
அலங். 11

22\. காலைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே.

My Lord ! Thou art the Supreme Head of this World and the Land of Devas Thou doth pay homage to the holy Feet of Thy consort Sri Valli, with her long and lovely tuft of hair (for Her sincere and steadfast devotion to Thee) How bounteous is Thy Grace towards me! I look upon Thee (in thought and feeling) as the Mighty Meru Mountaintall and Majestic and as Kumaran the daring God of eternal youth! What Penance have I performed to deserve this previlege to worship Thy sacred Feet.

சொற்பிரிவு : காலை குமரேசன் எனக் கருதி தாளை பணியத் தவம் எய்திய ஆ, பாளை குழல் வள்ளி பதம் பணியும் வேளை சுரபூபதி மேருவை.

பொழிப்புரை : பாளையை அணிந்த கூந்தலையுடைய வள்ளிநாயகியின் பாதத்தைத் தொழுகின்ற செவ்வேளை, தேவலோக



சக்கரவர்த்தியை, மேருவைப்போல் உயர்ந்தோனைக் காலையாகிய குமரேசன் என்று தியானித்து அவனுடைய திருவடிகளை வணங்கும் தவப்பயனை அடியேன் பெற்றது என்ன வியப்பு ?

காலைக் குமரேசன் : குழந்தை அழகுடன் விளங்கிய செல்வ முருகனைக் காளைப்பருவம் கொண்டுவரும் குமரனைக் காண்கின்றார் அந்தக் குமரக்கோலத்தை.

" மெல்ல மெல்ல உள்ளினல் உள்ளத்தே அரும்பும்
தனிப்பரமானந்தம் "

பாளை : தலைப்பாளை என்னும் கூந்தலிலணியும் ஆபரணம்.

செவ்வேள் : முருகன் ( கருவேள் – மன்மதன் )

மேருவை : மேருவைப்போல் பெருமை உடையவனை

பூபதி : சக்கரவர்த்தி.

வள்ளி பதம் பணியும் வேள் : ஆன்மாக்களுக்கும் பிரபஞ்சப்பற்று நீங்கி மலபரிபாகம் வருதலைச் செய்யுங் கடவுள்.

" பாதி மதிநதி போது மணிசடை நாதனருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள் பாதம் வருடிய மணவாளா "
- திருப்புகழ்

முருகக் கடவுளைப் பக்தியோடு தியானித்துவரின் திருவருள் தோன்றிச் சிவானந்தம் உண்டாகும்.

23\. அடியைக் குறியா தறியா மையினன்
முடியக் கெடவோ முறையோ முறையோ ?
வடிவிக் ரமவேல் மகிபா ! குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே.

My Lord ! Thou hath the sharp and mighty Vel Thou art the peak of all Divine qualities. Thou doth embrace (in divine fervour) Sri Valli (our holy mother) brought up by the Koravas and who hath the delicate celestial form (body) like the streak of lightning. Is it proper on my part to totally ruin myself out of ignorance, by not propitiating Thy sacred Feet?

சொற்பிரிவு : அடியைக் குறியாது அறியாமையினால் முடியக் கெடவோ முறையோ முறையோ. வடி விக்கிரம வேல் மகிபா குறமின் கொடியைப் புணரும் குண பூதரனே !

பொழிப்புரை : கூர்மையான வெற்றிவேலை ஏந்திப் பூமியைக் காப்பாற்றுகிற தலைவனே ! குறவர் குலத்தில் அவதரித்த மின்னல்கொடி போன்ற வள்ளிநாயகியைத் தழுவுகின்ற குணமலையே ! அறியாமையினால். நின் திருவடிகளை என் மனத்தில் நிலைநிறுத்தி என் இலட்சியப் பொருளாகக் கொண்டு தியானம் செய்யாமல் அடியேன் முற்றிலும் அழிந்து கெட்டுப்போகவோ ? ( நான் பிறந்தேன் ) என்னைக் கெடாது காக்கக்கடவாய் உனக்கு முறையிடுகின்றேன்.

முறையோ முறையோ : என்று கூறுதல் முறை வேண்டினார் முறை செய்வாரை நோக்கிக் கூறுங் கூற்று.

அடியை : திருவடியை

குறியாது : தியானியாமல்

வடி : கூர்மை

மகி : பூமி ; பன் : காப்பாற்றுபவன். மகிபா : பூமியைக் காப்பாற்றுகிற தலைவன்.

மின்கொடி : மின்னற் கொடிபோலத் துவளும் இடையுடையவர். வேடுவர்களின் தவம் அளந்தறிய வல்லவர் யாவருளர்.

பூ : பூமியை ; தரம் தாங்குவது. பூதரம் : மலை

அறிவின்மையால் உமது திருவடியைத் தியானியாது கெட்டுப்போகாமற் காப்பாற்றுதல் உனக்கு முறை செய்தலாம் என்பதனை உனக்குத் தெரிவிக்கின்றேன்.

24. கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வே னருள்சே ரவுமெண் ணுமதோ ?
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே.

My Lord! How woeful my plight! I am imperceptibly drawn towards the voluptuous breasts of vile women (with eye like sharp Vel-stick) but not towards Thee the fountain head of Eternal Bliss !



Oh Lord of Indra Loka! Thy sharp Vel (powerful enough to fight for long) pierced through split and destroyed the Krownja mountian, the whole race of Asuras and Surapadma (Thou art so Great, pray, save me from such wicked temptation)

சொற்பிரிவு : கூர்வேல் விழிமங்கையர் கொங்கையில் சேர்வேன் அருள் சேரவும் எண்ணுமதோ வேரொடு சூர்குன்று தொளைத்த நெடும்போர் வேல் புரந்தரன் பூபதியே.

பொழிப்புரை : கிளையுடன் சூரனையும் கிரவுஞ்ச மலையையும் தொளைத்த நீண்ட போர் ஆடின வேல் உடையவனே ! இந்திரனுக்குத் தலைவனே ! கூரிய வேல்போன்ற கண்கள் உடைய விலைமாதர்களை விரும்பிச் சேரும் அடியேனுக்கு நின் திருவடியை அடையவேண்டும் என்ற எண்ணம் உண்டாகுமோ ?

வேரொடு : அடியோடு

புரந்தரர் : இந்திரன்

மங்கையர் கொங்கையில் சேர்வேன் : பெண் ஆசை மனத்தில் இருக்கும்போது உன் திருவடியை நினைக்கவும் தகுதியில்லையே.

காமத்தை விட்டாலொழியக் கடவுள் அருள் பெறுதல் இயலாது மடந்தையர் பார்வை வலையிலே பட்ட என்னை நீ காப்பாற்றவேண்டும். உன் திருக்கைவேலால் அந்த வலையை எளிதில் அறுத்து எறிந்துவிடலாமே.

" பந்தாடும் மங்கையர் செங்கயல் பார்வையில் பட்டுழலுஞ்
சித்தாகுலந்தனைத் தீர்த்தருளாய் செய்யவேல் முருகா "
அலங். 79

கூர்வேல்விழி : கூரிய வேல் போன்ற கண்.

" வாதினை அடர்த்த வேல்விழியர் தங்கள்
மாயம் அது ஒழிந்து தெளியேனே "
- திருப்புகழ்

" காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட,
தூதென்றெ ண்ணமற் சுகமென்று நாடுமித்துற்புத்தியை
யேதென் றெடுத்துரைப்பே னிறைவா கச்சியேகம்பனே "
- பட்டினத்தார்

நெடும்போர் - நமது உள்ளத்தில் தீய குணங்களும் நல்ல குணங்களும் குடிகொண்டு இருக்கின்றன. அதாவது அசுர இயல்புகளும் தேவ இயல்புகளுமாகக் கலந்து காணப்படுகின்றன. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் ஆகிய தீயகுணங்கள் நற்குணங்களை அடக்கி ஆன்மாக்களுக்கு மிகுந்த துன்பத்தை விளைவித்து வருகின்றன. எங்கள் பொல்லாத தீய குணங்களாகிய அசுரர்களை அழிப்பது முருகனுக்கு ஒரு நீண்ட போர்.

25. மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ அடியே னலையத் தகுமோ
கையோ அயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலே றியசே வகனே.

My Lord ! Thou art the warrior on the peacock Thy Feet, Arms Body and Vel are all of glowing red colour. Is it just that I should be tossed hither and thither in the whirl - pool of Life under the delusion that this fleeting existence of mine (caused by my previous karma) is real? (Pray show me the way out to reach Thy Divine Feet!)

சொற்பிரிவு : வெவ்வினை வாழ்வை மெய்யே என உகந்து, ஐயோ அடியேன் அலையத் தகுமோ கையோ அயிலோ கழலோ முழுவதும் செய்யோய் மயில் ஏறிய சேவகனே !

பொழிப்புரை : கைகளும், வேலும், இரு பாதங்களும், திருமேனி முழுவதும் சிவந்த நிறமாயிருப்போனே ! மயில் மீதில் வரும் வீரனே ! கொடிய வினையால் ஆகிய உலக வாழ்க்கையைப் பொய் என்று எண்ணாமல், அதை விரும்பி மெய்யானதே என்று நம்பி, ஐயோ ! அடியேன் பிறந்து இறந்து பெயர்ந்து துன்புற்று அலையலாமோ ?

இப்பொய் வாழ்வைத் தொலைத்து அலையாத அமைதியான பேரின்ப மெய் வாழ்வைத் தந்து அருளல் வேண்டும் என்பது அடிகளது வேண்டுகோள்.

முழுதும் செய்யோய் : முருகன் சிவந்த பொன் நிறமுடையவர், சிவபெருமானையும் சிவந்த நிறமாக ஞானிகள் கண்டார்கள்.



"செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனே"
- திருவெம்பாவை

"செம் பொன்மேனிச் செஞ்சுடரே முழு
வம்ப னேனுனை வாழ்த்தும் மதி இன்றி"
- தாயுமானவர்

"பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக் கசைத்து"
– சுந்தரர்

"பொன்னிற மித்திரு வெண்ணீறு பொலிந்திடு மாகாதே"
- திருப்படையாட்சி

"பொற்பாதம் காணப் பெற்றால் மனிதப்
பிறவியும் வேண்டுவதே" – அப்பர்

மெய்யே என வெவ்வினை வாழ்வை உகந்து :
நிலையில்லாத பொருள்களை அடைந்து அதன்கண் தினந்தோறும் அனுபவத்தில் ஆழ்ந்து அவற்றையே நிலையென எண்ணி விரும்பி :

"பொய்யாய செல்வத்தே புக்கழுத்தி நாள்தோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட"
- திருக்கோத்தும்பி 17

26. ஆதா ரமிலே னருளைப் பெறவே
நீதா னொருசற் றுநினைந் திலையே
வேதா கமஞா னவிநோ தமனோ
தீதா சுரலோ கசிகா மணியே.

My Lord ! Thou art the facile preceptor to Thy devotees of the Vedas, Agamas and other divine lore. Thou art beyond the mind. Thou art the crowning jewel of Devaloka. I have no ways or means of deriving Thy Grace. Thou hath not bestowed even the least thought on this poor soul. Pray help me!

சொற்பிரிவு : ஆதாரமிலேன் அருளைப்பெற நீதான் ஒரு சற்றும் நினைந்திலை, வேத ஆகம ஞான விநோத மன அதீதா சுரலோக சிகாமணியே.

பொழிப்புரை : வேதாகமங்களை ஆராய்தலும் அறிவித்தலும் பொழுதுபோக்கு விளையாட்டாக்கியவனே ! மன முதலிய

கருவிகட்கு அறியப்படாமல் அப்பாற்பட்டிருப்பவனே ! தேவலோகத்திற்கு முடிமணியாக விளங்குபவனே ! ஒருவித மான பற்றுக்கோடுமில்லாத எழியேன் நினது திருவருளைப் பெற்று உய்வதற்கு நீயாவது ஒரு சிறிதளவேனும் திருவுள் ளம்கொண்டிலையே, அதுவும் என் தீவினைப் பயன்போலும் என நோகின்றார் அடிகள்.

ஆதாரம் : பற்றுக்கோடு.

விநோதம் : பொழுதுபோக்கு விளையாட்டு.

"நீயான ஞான விநோதந்தனை என்று நீ அருள்வாய்"

அலங். 46

"பேற்றைத் தவம்சற்று மில்லாத வென்னைப்
பிரபஞ்சமென்னுஞ்
"சேற்றைக் கழிய வழிவிட்டவா"

அலங். 1

"சிவமே பெறுந்திரு எய்திற்றி லேன் நின் திருவடிக்காம்
பவமே அருளுகண்டாய் அடியேற்கு எம் பரனே"

திருச்சதகம் 4

"அண்ணலே உன் அடியவர்போல் அருள்
கண்ணினால் உன்னைக் காணவும் வாவெனப்
பண்ணினால் என் பசுத்துவம் போய் உய்யும்
வண்ணமாக மனோலயம் வாய்க்குமே ?"

"தானந் தவஞ் சற்றுமில்லாத நான் உண்மைதானறிந்து
மோனம் பொருளெனக் கண்டிடச் சற்குரு மோனனுமாம்",

- தாயுமானவர்

நீ நான் ஒருசாற்றும் நினைந்திலையே : எம்பெருமானே ! சிறியேன் உய்தற்பொருட்டு எனக்குத் திருவருள் பாலிக்கவேண்டு மென்று ஒரு சிறிதாவது கருணைகொண்டிலையே.

"கல்லேனு மையவொரு காலத்தில் உருகும் என்
கல் நெஞ்சம் உருக விலையே
கருணைக் கிணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க ஒரு கடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும் பெரு
வழக்குக் கிழுக்கும் உண்டோ



வானமாய் நின்று இன்பமழையாய் இறங்கி எனை
வாழ்விப்பது உன் பரம் காண்
பொல்லாத சேய் எனில் தாய் தள்ளல் நீதியோ
புகலிடம் பிறிது முண்டோ
பொய் வார்த்தை சொல்லிலோ திருவருட்கு அயலுமாய்
புன்மையேன் ஆவன் அந்தோ
சொல்லால் முழக்கிலோர் சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா இருக்க அருளாய்
சுத்த நிர்க்குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுகவாரியே"

- தாயுமானவர்

[illegible] ஆநிதன் : மனத்திற்கு எட்டாதவன்.

மாமணி : முடிமணி. முருகன் பாதங்களைத் தேவர்கள் தங்கள் தலையில் மணியாக அலங்கரித்துக்கொண்டிருக்கிறார்கள்.

(11 - ம் பாட்டு)

திருவருள் உய்விக்க உய்தலன்றிச் சிற்றுயிர்க்குந் தாமே உய்யு முதன்மையில்லை.

27. மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலே றியவா னவனே.

My Lord! Thou art like the precious (unalloyed) Gold and the peerless Gem. Thou art the Eternal Truth and the everflowing fount of mercy. Thou art the Lord of all and the Lord on the beautiful pacock. How deplorable is my Fate as a result of which I have sought this fleeting life of lightning rapidity (so transient and vain) pray save me !

சொற்பிரிவு : மின்னேநிகர்வாழ்வை விரும்பிய யான் என்னே விதியின் பயன் இங்கு இதுவோ, பொன்னே மணியே பொருளே அருள். மன்னே மயில் ஏறிய வானவனே !

பொழிப்புரை : மின்னலேபோலத் தோன்றியவுடன் கெட்டு மயக்கும் உலக வாழ்க்கையை விரும்பிய யான் எவ்வளவு இகழ்ச்சிக்கு உரியேனாயினேன். இந்நிலை என் தலைவிதியின் பயன்போலும். என் பொன்னே, மணியே, செல்வமே,

என் அரசே ! மயில் ஏறிய தேவனே, நீ அடியேன்மேல் இரக்கம் கூர்தல் வேண்டும்.

என்னே : இகழ்ச்சிக் குறிப்பிடைச் சொல்.

மின்னே நிகர் வாழ்வு : நிலையற்ற வாழ்வு, உலக வாழ்வு மின்னல்போலத் தோன்றி அழியும்.

"நீர்க்குமிழிக்கு நிகர் என்பர் யாக்கை நில்லாது செல்வம்
பார்க்கும் இடத்து அந்த மின்போலும் என்பர்."

அலங். 66

விரும்பிய பயன் :

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி நம்பலவன்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென்றே அறிவாரில்லையே"

- பட்டினத்தார்

"வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்

– சுந்தரர்

விதியின் பயன் :

"தொல்லை வினைக் கீடாய்ச் சுழல்கின்ற நாளெருவ
னெல்லை யிலா நின் கருணை யெய்துவனே" -தாயுமானவர்

பொன்னே மணியே பொருளே மன்னே:

ஆர்வத்திலே விளிகள் பல அடுக்கிவந்தன.

"புகவே தகேன் என் பொல்லா மணியே; - திருச்சதகம் 20

"அரும் பொன்னே மணியே என் அன்பே. - தாயுமானவர்

"மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே" -சுந்தரர்

மயில் ஏறிய வானவனே : மயிலாகிய (பரஞானத்தில் ஏறிவந்த) முருகக் கடவுளே.

அருள் : அருள்வாயாக. வியங்கோள்வினை ஏவல் வினைவாய் பாட்டால் வந்தது.



28. ஆறு வமுதே யயில்வே லரசே
ஞானு கரனே நவிலத் தகுமோ
யானு கியவென் னைவிழுங் கிவெறுந்
தானய் நிலைநின் றதுதற் பரமே.

My Lord Thou art the Ever fresh Divine Nectar (ambrosia) with the sharp Vel in Thy Hand (to destory Evil forcues) Tho art the Embodiment of Wisdom By Thy Grace I lost the awareness of my body and had the unique inexplicable Divine experience of self-effacement and self-knowledge (by absorbing the 'I' in me with "Thee') This experience transcends all worlds!

சொற்பிரிவு : ஆறு அமுதே அயில் வேல் அரசே ஞான ஆகரனே, யானாகிய என்னை விழுங்கி வெறும் தான் ஆய் நிலைநின்றது தற்பரம் நவிலத்தகுமோ.

பொழிப்புரை : உண்ண உண்ணத் தெவிட்டாத அமுதமே ; கூர்மையுடைய வேற்படை தாங்கும் அரசே ; மெய் உணர்வுக்குப் பிறப்பிடமாயிருப்போனே ; அது எனப்படும் பரம் பொருள் யான் எனப்பட்ட என்னையுண்டு விழுங்கி யாதொன்றும் இல்லாத தானொன்றுமேயாய் இருந்த நிலையில் இருந்தது, நின்னருளால் யான் பெற்ற அதனை இவ்வாறு இருந்தது என யான் சொல்லாகுமோ?

ஆறு : மேன்மேலும் போதும் என்னாத.

ஞானகரனே : ஞான + ஆகரன், ஆகரன் : பிறப்பிடமாயவன்

விழுங்கி : தோன்ற ஒட்டாமற் செய்து

நிலை நின்றது : நிலைத்து நின்றது.

யானாகிய என்னை : உள்ளம் உடம்பு முதலியவற்றினின்றும் வேறாய் அறிவே பிளம்பாகிய என்னைச் சொல்லிறந்த தொன்மைப் புணர்ப்பு.

"பெருவெளியாய் ஐம்பூதம் பிறப்பு இடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வரும் இடமாய் மனமாதிக்கு எட்டாத பேரின்ப
மயமாய்ஞான
குரு அருளால் காட்டிடவும் அன்பரைக் கோத்து
அறவிழுங்கிக் கொண்டு அப்பாலும்
தெரிவு அரிதாய்க்கலந்தது எந்தப் பொருள்
அந்தப்பொருளினை யாம் சிந்தை செய்வாம் -தாயுமானவர்

29. இல்லே யெனுமா யையிலிட் டனைநீ
பொல்லே னறியா மைபொறுத் திலையே
மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே

My Lord with Thy dazzling Vel, Thy twelve robust shoulders which are ever ready for fight with Thy foes are adorned with my garland of sweet words.

I Have nothing in this world to be called as my own. Yet. Thou hath plunged me in the Maya (Illusion) of worldly life, I am wicked and ignorant - Pray forbear and forgive me !

சொற்பிரிவு : இல்லே எனும் மாயையில் இட்டனை நீ பொல்லேன் அறியாமை பொறுத்திலையே, மல்லே புரி பன்னிரு வாகுவில் என் சொல்லே புனையும் சுடர் வேலவனே.

பொழிப்புரை : மல்லுப்போர் செய்யும் நின் பன்னிரண்டு திருத் தோள்களிலும் என்னுடைய பாமாலையை அணிந்துகொள் ளும் ஒளியாகிய வேலவனே ! நீ அடியேனை இல்வாழ்க்கை எனும் மாயையில் வைத்தாய். அதனால் நீ தீயேனுடைய அறியாமையால் செய்த பிழைகளைப் பொறுத்தாயல்லையே. பொருத்திருந்தால் அடியேனுக்கு இத்தண்டனை செய்திருக்க மாட்டாய் என இறைவனிடம்கூறி அவனது பிழைபொறுக் கும் பெருமையை நினைவூட்டுவார்போலச் சொல்லுகிறார்

இல் எனும் மாயை : இல் வாழ்க்கை என்னும் மாயை.

இட்டனைநீ :

உழவர் செய்யுந் தொழிலுக்குத் தக்க பயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழிலானே விளைவிக்கமாட்டாதது போல, உலைவும் வித்துமாய்த் தொன்றுதொட்டு வரும் அவ்வினைகளை வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன், அவவாறின்றி வினைதானே உயிர்கட்குப் பயனைப் எந்து பொருந்தமாட்டாது.

.......................வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன் விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலலையா சென்று" - சிவஞானபோதம் 2

பொல்லேன் : பொல்லாதவனாகிய யான்



பொறுத்திலையே : மாயையிவிட்டு அஞ்ஞானத்தைப் போக்கி மெய்யுணர்வு உபதேசித்தல் முருகப்பிரான் திருவிளையாட்டு.

" மறுத்தனன் யான் உன் அருள் அறியாமையில் என் மணியே
வெறுத்து எனை நீ விட்டிடுதி கண்டாய் வினையின் தொகுதி
ஒருத்தெனை ஆண்டுகொள் உத்தர கோசமங் கைக்கரசே
பொறுப்பரன்றே பெரியோர் சிறுநாய்கள் தம்
பொய்யினையே"

- நீத்தல் விண்ணப்பம் 6

எத்தனை குறைகள் எத்தனை பிழைகள் எத்தனை அடியேன்
எத்தனை செய்தால் பெற்றவனீ குரு பொறுப்பது உன்கடன்
– தேவராயசுவாமிகள்

வாகு: தோள்

மல்லேபுரி : மற்போரிடும்

ன்சொல்லே : அருணகிரியார் முருகனுக்குப் பாடிய கவிகள் எல்லாம் வாடாத அற்புத அலங்காரப் பாமாலைகள். அவர் இயற்றிய திருப்புகழ் ஒன்றன்பின் ஒன்றுகப் பூமாலைகள் போல் உதிர்ந்துகொண்டேபோகின்றன.

30. செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வா ததென வுணர்வித் ததுதான்
அவ்வா றறிவா றறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே.

My Lord ! Thy Vel hath the glowing red colour of the evening sky! After my fervent prayers to Thee and on my longing for long, Thou appeared before me, as my celestial Curu and blessed me with Thy inspiring Initiation which (as enlightened by Thee) was precious and peerless. But, how can it be imparted or made intelligible to others ? It can only be experienced but cannot be explained.

சொற்பிரிவு : செவ்வான் உருவில் திகழ்வேலவன் அன்று ஒவ்வாதது என உணர்வித்ததுதான் அவ்வாறு அறிவார் அறிகின்றது அலால் ஒருவர்க்கு எவ்வாறு இசைவிப்பது.

பொழிப்புரை : செவ்வானத்தின் நிறம்போல விளங்குந் திருமேனி யோடு முருகன் குருவாய் ஒருநாள் வந்து, இஃது வேறு

எதனோடும் ஒவ்வாதது என்று அடியேனுக்கு அவன் உபதேசித்தது அவரவர்கள் தத்தம் உள்ளத்தே அறிந்து அதனை உணரவேண்டுமே அல்லாமல், அந்த இன்பத்தைப் பிறர் ஒருவர்க்கு அவர் உடல் படும்படி சொல்லிக் காட்டுவது எவ்வாறு ? அது முடியாது.

செவ்வான் உருவில் : சூரியன் மாலையில் கடலில் மறைகின்றபோது வானம் செந்நிறமாகத் திகழுவதுபோல் நிறமுடையது குமரனின் திருமேனி.

“ செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்தளிர்துயல் வரும் காதினன் ”

- திருமுருகாற்றுப்படை 206

ஒவ்வாதது என உணர்வித்தது : இது உவமை காட்டப்படாதது என்று அடியேனுக்குச் சொல்லாமற்சொல்லி அறிவித்த உண்மை ( அதாவது அனுபவத்திற்கு வரச்செய்தது.)

அன்று : முன்னொரு நாள்

அவ்வாறு அறிவார் : முருகப் பெருமான் உபதேசித்த உண்மையை அவன் உணர்வித்தவாறு உணர்வார்.

அறிகின்றது அலால் : தாமே தம் உள்ளத்தே அறிந்து நுகர்ந்து மகிழ்வதல்லாமல்.

எவ்வாறு இசைவிப்பது : அதனைப் பிறரொருவருக்குச் சொல்லிக் காட்டி அவரை எவ்வாற்றான் உடன்படுவிப்பது ? எந்த விதத்திலும் அநுபவத்தை எடுத்துக்கூறமுடியாது.

“ சொல்லாலே சொல்லுதற்குச் சொல்லவா இல்லையடி
எவ்லோருங் கண்டிருந்து இப்போ தறியார்கள் ”

- பட்டினத்தார்

“ சற்று மென்பலன் சுற்றிடு நூன்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி
நிற்றல் வேண்டு நிருவிகற் பச்சுகம்
பெற்ற பேர் பெற்ற பேசாப் பெருமையே ’

– தாயுமானவர்



31. பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யெனவென் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே !

My Lord on the lovely Peacock ! Thou hath decreed that it is my fate to sink in this deep pit of this vain, distressing, illusory worldly life. Have I done anything improper ? (I hope not). Why then art Thou so adamant towards me ? Even if I suffer, it does not matter. May Thou live for ever ! Pray bless me to earn Thy Grace !

சொற்பிரிவு : மயில்வாகனனே பாழ் வாழ்வு எனும் இப் படுமாயையிலே வீழ்வாய் என என்னை விதித்தனையே தாழ்வு ஆனவை செய்தன தாம் உளவோ ? இனி நீ வாழ்வாய் !

பொழிப்புரை : மயில்வாகனனே பாழான வாழ்க்கை என்னும் இக் கொடிய மயக்கத்தில் வீழ்ந்து கெடுவாயாக என்று அடியேனை நீ பணித்தாய், அவ்வாறு நீ பணித்ததற்கு நான் செய்தனவாகிய இழிவான குற்றங்கள் எவையேனும் இருக்கின்றனவோ ? அவ்வாறு நான் கெட்டொழிந்து போகிறேன், நீ வாழ்ந்து போ.

பாழ் வாழ்வு : கண்ணால் சுட்டி அறியப்படும் பொருள்கள் எல்லாம் நிலையான மெய்ப் பொருள்கள் அல்ல என்று அரை நிமிட நேரம் உன்னைத் தியானம் செய்ய முடியாத வாழ்வு.

இ : இந்த

தாழ்வானவை : இழிவான குற்றங்கள்.

உளவோ : உண்டோ ? இருக்கின்றனவா ?

நீ வாழ்வாய் : அடிகள் இவ்வாறு தமது வாழ்க்கைத் துன்ப மிகுதி கூறி இறைவன் தன் அருள் மிகுதியால் விரைந்து தம்மை உய்விக்குமாறு குறித்துப் பிணங்கிக் கூறுகின்றார். இதே போலச் சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூரிலே பாடிய திருப்பகத்தில் :

"மீளா அடிமை உமக்கே ஆளாய்" என்று தொடங்கி "வாழ்ந்து போதீரே" என்று முடிக்கிறார். என்னைத் துன்பப் படுத்துகிற நீ வாழ்ந்து போவாயாக! என்று பாடுகிறார்.

படுமாயை : உயிர்கள் சிக்கி அல்லலுறுகின்ற இருள் வலையாகிய மாயை.

"நேற்றுளார் இன்று மாளா நின்றனர் அதனைக் கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணைகாலம்
ஆற்றிலேன் அகண்டானந்த அண்ணலே அளவில் மாயைச்
சேற்றிலே இன்னும் வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே."

– தாயுமானவர்

என்னை விதித்தனை :

"எல்லா முன்னுடைமையே
எல்லா முன்னடிமையே
எல்லா மூன்னுடைய செயலே"

– தாயுமானவர்

..................................பல்லுயிர்க்கு
முன்னை முதலென்ன முதலில்லோ – லல்வினைக்க
ணெல்லாவுலருமெடுப்புண் டெடுப் புண்டு
செல்காலம் பின்னரகஞ் சேராமே.

– போற்றிப் பஃறொடை

32. கலையே பதறிக் கதறித் தலையூடு
அலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே மலைகூ றிடுவா கையனே.

My Lord! Thou art like the unassailable mountain, who like a male elephant doth embrace (in divine fervour). Thy beloved consorts Devayanal (daughter of Indra who gave her in marriage to Thee as a token of his gratitude for Thy gracious help in liberating the Devas from the tyranny of Asuras) and Sri Valli (who resembles female elephant), brought up by hunters who kill beasts and live upon their flesh. Thou split the Krownja mountain and adorned Thyself with



the garland of victory. My longing to learn the Sastras (for mere wordy warfare) is of no use to me (Pray lift me from mere book-lore and bless me with divine knowledge).

சொற்பிரிவு : கலையே பதறிக் கதறி தலையூடு அலையேபடும் ஆறு அதுவாய்விடவோ. கொலையே புரி வேடர் குலப் பிடிதோய் மலையே! மலைகூறிடு வாகையனே.

பொழிப்புரை : கொலைத் தொழில்களையே செய்து வருகின்ற வேட்டுவர் குலத்துக்கு உரிய பெண் யானை போன்ற வள்ளி நாயகியாரைத் தழுவி மகிழ்கின்ற மலை போன்ற பெருமானே! கிரவுஞ்ச மலையைக் கூறுசெய்து வெற்றி வாகை சூடியவனே! சகல கல்வி நூல்களையுங் கற்று மனம் உடல் பதைத்து உரத்த குரலில் கதறிக்கொண்டு மூளை கலங்கி, ஒருவித கதியும் இல்லாமல், நான் அப்படியாகிவிடல் வேண்டுமோ?

கலை : சாத்திரங்கள். நான் கற்ற கல்வி என்னை ஏமாற்றி விட்டதே. கல்வி ஞானம் முத்தி தராது என்பதை இப்போதுதான் உணர்ந்தேன் என்று அடிகள் கதறுகிறார்.

"சாத்திரம் பல பேசும் சழக்கர்கள்" – அப்பர்

"கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்" – திருவாசகம்

பதறிக்கதறி : கலைகளைக் கற்றுத் தெளிந்தும் பயன்கொள்ளாதவனாய் உள்ளேன். உனது திருவடியை உணர்ந்து சிந்திக்கும் தகுதி பெறுவேனோ?

தலையூடு அலையே படுமாறு : தலையினுள்ளே மூளை குழம்பும்படி. (அதுவாகிவிடல் வேண்டுமோ?)

கருவினுரு வாகிவந்து வயதளவிலே வளர்ந்து
கலைகள் பலவே தெரிந்து மதனாலே
......................................................
கவலை பெரிதாகி நொந்து மிகவாடி

– திருப்புகழ்

கொலேயே புரிவேடர் : விலங்கு முதலிய உயிர்களைக் கொலை செய்து வாழ்பவர், அவர்கள் கொலை செய்வதினால் உண்டாகும் பாவங்கள் மறு பிறப்பினும் வந்து மூண்டுகொண்டு நோயினைச் செய்யுமாம்.

"அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே - அக்கால்
அலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்"

- நாலடியார் 123

"அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும்"

- குறள்

கொலையும் புலால் உண்ணலும் கொடிய பாவங்கள்.

"கொன்றேன் அநேகம் உயிரை எல்லாம் பின்பு
கொன்று கொன்று தின்றேன்"

- பட்டினத்தார்

"பொய்யனேன் புலையனேன் கொலையனேன் நின் அருள்புலப்பட
அறிந்தும் நிலையாப் புன்மையேன்"

- தாயுமானவர்

"கொல்லா விரதங் கொண்டோரே நல்லோர் மற்
றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே"

- தாயுமானவர்

இவ்வாறு முறையிடுவது ஞானிகள் வழக்கம்.

பிடிதோய்மலே : "வேதக்காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த போதக்காட்சிக்கும்" எட்டாதவன். வஞ்சமற்ற வேடுவர் மத்தியிலே தானும் ஒரு வேடுவன்போல், ஒரு பெண் யானை போன்ற வேடுவப் பெண்ணை விரும்பி மணந்தான்.

வாகையனே : வெற்றிமாலை பெற்றவனே ?



33. சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே

My Lord Kanda ! Muruga ! Thou art the embodimen of grace Thon emerged as a grand Avathar out of the Divine sparks from the eyes of Lord Siva (which were carried by the holy waters of Ganga and left in the Divine pool of Saravanam on the Himalayas). Thou art the outcome of the boon granted to Devas by Lord Siva. I am bound by the distressing ties of wife and wealth, which grow ever increasingly like the forest on the Vindhya Mountain. When can I liberate myself from such bondage ? Pray, show me the way !

சொற்பிரிவு : சிந்தாகுலம் இல்லொடு செல்வம் எனும் விந்தா அடவி என்று விடப்பெறுவேன் மந்தாகினி தந்த வர உதயனே கந்தா முருகா கருணை ஆகரனே.

பொழிப்புரை : கங்கை தந்த மேலான தோற்றம் உடையவனே ! கந்தா முருகா கருணாகரனே ! மனைவி மக்கள் செல்வம் மனத்துக்குத் துன்பம் தருபவை. விந்திய மலைக்காடு போன்றன. இந்தப் பற்றுக்களைவிட்டு நீங்கி எப்போது சாந்தி பெறுவேன்.

சிந்தாகுலம் : வியாகுலம். மனதில் வரும் துன்பம் மனக்கவலை. சிந்தை + ஆகுலம்.

இல் : வீடு. வீட்டினுள்ள மனைவி மக்களைக் குறிக்கின்றது. மனைவி மக்கள் செல்வம் இவைகளையே வாழ்க்கையின் குறிக்கோளாக நினைந்து மகிழ்கின்றேன்.

விந்தாடவி : விந்த + அடவு. விந்திய மலைக்காடு. இக்கொடிய காட்டிற்குள் சென்றுவிட்டால் மீண்டும் வெளிவரத் தெரியாமல் அலைந்து வருந்துவர்.

மந்தாகினி : கங்கை. தேவர்கள், அசுரரின் கொடுமையைப் பொறுக்கமுடியாமல் சிவபெருமானிடம் சென்று முறையிட அம்முறையீட்டைக் கேட்டருளிய தேவாதிதேவன் 'நீங்கள்

துன்புறவேண்டாம். நாம் குமரனைத் தருகின்றோம்' என்று ஆறு அருட் சுடர்கள் அளித்தருளினர். அந்தச் சுடர்களை வாயுதேவனும் அக்கினி தேவனும் கங்கா நதியில் விட்டார்கள். மந்தாகினி (கங்கா நதி) தன் அலைக்கரங்களால் ஏந்திக்கொண்டுபோய் அந்த ஆறு சுடர்ப்பொறிகளையும் சரவணப் பூம் பொய்கையில் விட்டாள். ஆகையால் முருகனை மந்தாகினி தந்த வரோதயன் என்றார்.

வரோதயன் : மேலான தோற்றமுடையவன்.

விடப்பெறுவேன் : எவ்வகையில் இவ்வுலக மயக்கத்தில் நின்றும் வெளிவந்து தேவரீர் திருவடியை அடைவேன்.

கருணாகரனே : கருணைக்குப் பிறப்பிடம் ஆனவனே.

கந்தன் : ஆறு குழந்தைகளும் ஒன்றாக இணைந்த முருகன் (கந்தம் – கூட்டம்)

"சேயவன் வடிவம் ஆறும் திரட்டி நீ ஒன்றாச் செய்தாய்
ஆயதனாலே கந்தனும் எனும் நாமம் பெற்றான்."

– கந்தபுராணம்

34. சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குவரந் தருவாய்
சங்க்ரா மசிகா வலசண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே.

My Lord Shanmugha! Thou art the Lord of war on the divine Peacock! Thou art the foster son of the holy Ganges and the fountain-head of all grace. Grant me the boon to save myself from the vile temptations of harlots who adopt all artificial means to show off their beauty with attractive jewels, dance and songs.

சொற்பிரிவு : சிங்கார மடந்தையர் தீநெறிபோய் மங்காமல் எனக்கு வரம்தருவாய், சங்க்ராம சிகாவல சண்முகனே கங்காநதிபால க்ருபா ஆகரனே.



பொழிப்புரை : யுத்தஞ் செய்கிற மயில் வாகனத்தையுடைய ஆறுமுகக் கடவுளே! கங்கை ஆற்றின் குமாரனே, கருணைக்கு உறைவிடமானவனே! காமச் சுவை விளைவிக்கும் பரத்தையரின் கெட்ட வழியில் சென்று கெடாதபடி அடியேனுக்கு வரம் தந்து அருளல்வேண்டும்.

சிங்கார மடந்தையர் : சிங்காரம் புரியும் பெண்கள். பரத்தையர்: விலைமாதர். சிருங்காரம் என்பது சிங்காரம் என வந்தது.

"ஊறு ஞானத் துயர்ந்த வராயினும்
வீறு சேர்முலை யாதரை வெல்வரோ"

"தையலார் மையலிலே தாழ்ந்து விழக் கடவேனை"

– அச்சோப் பதிகம் 7

"பொய் எல்லாம் மெய் என்று புணர் முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளி"

- அச்சோப் பதிகம் 3

கங்கா நதிபாலன் : கங்கை முருகக் கடவுளைத் தாங்கித் தந்தமையின் கங்கா நதிபாலன் என்றார். ஆதலால் காங்கேயன் என்ற பெயரும் பெற்றார்.

வரம் தருவாய் :

"வளைத்துப்பிடித்துப் பதைக்கப்பதைக்க வதைக்கும் கண்ணார்க்கு
இளைத்துத் தவிக்கின்ற என்னை எந்நாள் வந்து இரட்சிப்பாயோ"

அலங். 32

"மாதர்வச மாயுற் றுழல் வாரும் மாதவமெனுமற்றறிவாரும்
தீதகல வோதிப் பணியாரும் தீநகர மீதிற் றிகழ்வாரே
நாதவொளியே! நற் குண சீலா! நாரியிரு வோரைப்
புணர்வேலா!
சோதிசிவ ஞானக் குமரேசா! தோமில் கதிர் காமப்
பெருமாளே"

- திருப்புகழ்

சங்க்ராமம் : யுத்தம்

> " பணி பாச சங்கிராம பணு மகுட
> நிகர அட்சம பட்ச பட்சி துரங்க "    அலங். 52

( இழிவான பாசத்தோடு போர் செய்பவரே! படத்தோடு கூடிய கோபம்கொண்ட பாம்பை உண்ணும் பறவையாகிய மயில் வாகனம் உடையவரே.)

சிகாவலம் : மயில்

35. விதிகா ணுமுடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
துதியா விரதா சுரபூ பதியே.

My Lord! Thou art the Lord of Indraloka. Thou hath vowed to propitiate none but (my holy Mother) Sri Valli who hath Her lovely forehead like the half-blown moon. I am unable to cast off this mortal coil (body), which is the result of my past acts (ie Karma good and bad) and in which I am ordained to suffer and struggle by Brahma (the Creator). When shall it please Thee to favour me with Thy lotus Feet to enable me to attain salvation?

சொற்பிரிவு : விதிகாணும் உடம்பை விடாது வினையேன் கதி காண மலர் கழல் என்று அருள்வாய் மதிவாள் நுதல் வள்ளியை அல்லது பின் துதியா விரதா சுரபூபதியே.

பொழிப்புரை : சந்திரன்போல் ஒளி வீசுகின்ற நெற்றியையுடைய வள்ளிநாயகியாரைத் தவிர வேறு ஒருவரையும் புகழாத கொள்கையுடையவனே! தேவர்களுக்குத் தலைவனே! பிரம தேவன் படைத்த உடலை விடாமல் அதைப்பற்றிக்கொண்டு அலைகிறேன். பாவியேன் நற்கதியைக்காண உன் மலர் போன்ற பாதங்களை எப்பொழுது அடியேனுக்குத் தந்து அருளப்போகிறாயோ ?

விதிகாணும் உடம்பு : பூர்வகன்மம் புலப்படும் உடல் என்றுமாம்.

விடா வினையேன் : பிரமதேவன் என் ஊழ்வினையினால் படைத்த தேகத்தை யமதூதர்கள் உயிரைக் கொண்டுபோக, மனைவி



மக்கள் அழுது, பறை முழக்கி, ஆபரணம் பூமாலை வாசனை தரித்து, மயானம் சென்று, மயான வைராக்கியம் பேசித் தகனம் செய்திடுவார்கள். இந்தத் தேகம் நிலை அற்றது என்று அறிந்தும் அதை விட்டுப் பிரியும் விருப்பத்தைக் காணவில்லையே. நீரின்மீது தோன்றி நின்று அழியும் நிலையில்லாத குமிழிபோன்ற தேகத்தை ஆதாரமாக நினைந்து நான் நிலைகுலைந்து கெட்டேன்.

> " பொய் திகழுமுலகநடை யென்சொல்கே னென்சொல்கேன்
> பொழுதுபோக்கே தென்னிலோ
> பொய்யுட னிமித்தம் புசிப்புக் கலைத்திடல்
> புசித்தபின கண்ணுறங்கல்
> கைதவம லாலிது செய்தவம தல்லவே
> கண்கெட்ட பேர்க்கும் வெளியாய்க்
> கண்டதிது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
> காலமோ அதையறிகிலேன்.
>
> – தாயுமானவர்

> " உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்,
> உடம்பினுள் உத்தமனைக் காண் "
>
> – ஔவையார்

> " பெறுதற்கரிய பிறவியைப்பெற்றும் நின் சிற்றடியைக்
> குறுகிப் பணிந்து பெறக் கற்றிலேன் "

( இந்தப் பிறவியைப் பெற்றும் உன் திருவடியை அடைவதற்குரிய நெறி இன்னது என்பதைக் கற்றுக்கொள்ளவில்லையே ! )

மதிவாள் நுதல் : பூர்வபட்சத்து அட்டமிச் சந்திரன் போன்ற ஒளிவீசுகின்ற நெற்றி.

கதிகாண மலர்க்கழல் : கதி – முத்தி. கழல் – திருவடி

> " பேய்க் குணமறிந்திருந்த நாய்க்கும் ஒருவழி தெரியப்
> பேரின்ப நிட்டை அருள்வாய் "
>
> – தாயுமானவர்

ஐயனே ! உன்னுடைய பொற்பாதங்கள் தான் முத்தியை அளிக்கும். அவற்றைக் காணும் வரையில் எனக்கு மன நிம்மதி கிடையாது.

36. நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யெனவோ தியதெப் பொருடான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே.

My Lord, Thy Lotus Feet are worn as garland on their heads and worshipped by Brahma, Indra and the Devas. But, Thou doth propitiate the feet of Sri Valli (Our Holy Mother), who is slender as a streak of lightning and brought up by the Koravas.

Pray enlighten me on the import of Pranavam (the basic Mantra) which Thou taught Thy beloved Father Siva, on His salutation to Thee by praising Thee as Natha (Nathasorupa). Kumara (the Supreme Lord of all!)

சொற்பிரிவு : அரனார் நாதா குமரா நம என்று ஓதாய் என ஓதியது எப் பொருள்தான் வேதா விண்ணவர் சூடும் மலர் பாதா குறம் மின் பதம் சேகரனே.

பொழிப்புரை : பிரமன் முதலிய தேவர்கள் சூடிக்கொள்ளும் தாமரை மலர் போன்ற திருவடிகளை உடையவனே! குறவர் குலத்தில் உதித்த மின்னல் போன்ற வள்ளி நாயகியாருடைய பாதத்தைத் தலையில் வைத்தவனே! சிவபெருமான் ஓதாய் என்று கேட்க அவ்வேளையில் உபதேசித்த இரகசியத்தை எனக்கும் உரைத்தருளக்கூடாதா?

அரனார் : சிவபெருமான்

குமராநம : குமராய நம என்பது குமராநம என இங்கு வந்தது.

ஓம்காரத்திற்குப் பொருள் கூறியமை : ஓம் என்னும் சொல்லுக்கு உரை கூற முடியாமல், பிரமன் எம்பெருமானால் சிறைப் படுத்தப்பட்டான். அவனை விடுவித்த பின் சிவபெருமான் குமாரக் கடவுளை நோக்கி, "ஸ்வரம் என்றும் சொல்லப் படும் ஓம்காரத்தின் உறுபொருள் உனக்குத் தெரியுமா?



தெரிந்தால் சொல்க" என்று கேட்டபோது, "மூலத்தொல் பொருளாகிய பிரணவப் பொருளை யாரும் கேட்ப இற்றென வியம்பலாமா? மறைவாகவன்றோ கூறவேண்டும்" என்று தந்தையின் திருச்செவியில் விளங்குமாறு ஓதியருளினார். ஞான நாயகராகிய சிவபெருமான் கேட்டு உள் மகிழ்ந்து திருக்கைலையை அடைந்தார்.

எப்பொருள் :

"வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்கு
எட்டாத புட்பம் இறையாத தீர்த்தம் இனி முடிந்தது
கட்டாத லிங்கம் கருதாத நெஞ்சம் கருத்தினுள்ளே
முட்டாத பூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே."

– பட்டினத்தார்

வேதா : பிரமன் முதல் மற்றத் தேவர்கள். முருகன் பாதத்தைத் தங்கள் தலைமேல் சூட்டிக்கொள்வார்கள்.

குறமின் : குறவர் குலத்தில் உதித்த மின்னல் போல் ஒளி வீசுகின்ற மேனியுடைய பெண்.

சேகரன் : தலையில் சூடுபவன். சந்திரசேகரன் : சந்திரனைத் தலையில் சூடுபவன்.

37. கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையா மறிவால்
அரிவா யடியோ டுமகந் தையையே.

Oh my Mind! You should constantly strive to attain the status of a member of the Holy Order of the true devotees of Lord Muruga who flung His mighty Vel on the Krownja mountain. Cut off root and branch with your impregnable Wisdom the haughty, boastful Ego in you which is but the out come of Ignorace.

சொற்பிரிவு : மனனே, கிரிவாய்விடு விக்கிரமம் வேல் இறையோன் பரிவாரம் எனும் பதம் மேவலையே புரிவாய் அகந்தையை அடியோடும் பொறை ஆம் அறிவால் அறிவாய்.

பொழிப்புரை : மனமே ! கிரவுஞ்ச மலைமேல் வெற்றிவேலை ஏவிய முருகப் பெருமானுடைய அடியார் கூட்டத்தில் சேர்ந்தவன் என்று சொல்லப்படும் பதவியை அடைய இலையே நீ விரும்புவாயாக, அந்தப் பதவியை அடைவதற்கு உன் அகங்காரத்தைப் பொறுமையுண்டாவதற்குக் கருவியாகிய மெய்ஞ்ஞானத்தால் அடியோடு அரிந்துவிடுவாயாக.

பரிவாரம் : பணி செய்யும் அடியார்களின் திருக்கூட்டம்.

புரிவாய் : விரும்புவாயாக.

"நின்னடியார் கூட்டத்தில் நீ அழைத்து வைத்திலை"
— பட்டினத்தார்

"சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர் குழாம்
சாரிற் கதியன்றி வேறிலை காண்."
அலங். 49

"மண்ணிலே பிறந் திறந்து மண்ணாவதற் கொருப்படுகின்றேனை
அண்ணல் ஆண்டுதன் அடியரிற்கூட்டிய அதிசயங்கண்டாமே'
அதிசயப்பத்து 6

மேவலை : அடைவதை

அகந்தையை : அகங்காரத்தை

பொறுமையாகிய அறிவால் முருகனுடைய புகழைப் பாடும் அடியார்கள் கூட்டத்தில் நீயும் ஒருவனாக விளங்குவாய். பக்தர்களில் நானும் ஒருவன் என்ற பெருமையுடன் வாழ்வாயாக.

38\. ஆதா ளியையொன் றறியே னையறத்
தீதா ளியையாண் டதுசெப் புமதோ
கூதா ளகிரா தகுலிக் கிறைவா
வேதா ளகணம் புகழ்வே லவனே.

My Lord ! Thou art the God of the Koravas (Vedars), who wear garlands of Kotthala flowers and in whose midst Thy consort Sri Valli was brought up. Thou art praised and adored by the galaxy of Vedalas (disembodier spirits). I am devoid of Wisdom, full of blemishes and wholly ignorant Yet, boundless hath been Thy Grace to have blessed me and taken me to Thy fold !



சொற்பிரிவு : ஆதாளியை ஒன்றும் அறியேனை அற தீதாளியை ஆண்டது செப்புமதோ கூதாளம் கிராத குலிக்கு இறைவா வேதாள கணம் புகழ் வேலவனே.

பொழிப்புரை : கூதாள மலரை அணியும் வேடர் குலத்தில் உதித்த பெண்ணின் நாயகனே ! பேய்க்கூட்டம் புகழ்ந்து துதிக்கின்ற வேலாயுதக் கடவுளே ! யாதொன்றும் அறியாத மனக் கலக்கமுடைய மூடனை, தீய செயல்களையே செய்யும் என்னை, என் தகுதியின்மையைப் பாராமல் ஒரு பொருளாக எண்ணி ஆட்கொண்ட உன் கருணையின் பெருமையை இத்தகையது என்று சொல்ல முடியுமோ ?

ஆதாளி : மனக் கலக்கமுடையவன்

ஆண்டது :

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என் அப்பன் என் ஒப்பில் என்னையும் ஆட்கொண்டருளி"
— திருக்கோத்தும்பி 4

'என்னை ஆண்டுகொண்டான் என் சிறுமை கண்டும்'
திருச்சதகம் 8

'அழுக்கு ஆர்ந்த நெஞ்சு உடையேனுக்கு ஐயா நின்
அருள்வழங்கி'

தீதாளி : தீமை செய்பவன்

கிராத குலி : வேடர் குலத்திற் பிறந்தவள்

வேதாள கணம் புகழ் வேல் : வேதாள கணங்கள் [illegible]
வேற்படை.

கூதாளம் : காட்டில் வளரும் [illegible]
'வெண்கூ தாளந் தொடுத்த [illegible]

39. மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணையென் றுமுடிந் திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே! சிவசங் கரதே சிகனே.

My Lord! Toou art the Monarch of All. Thou embraceth (in holy pose) the shoulders of Thy beloved consort Sri Valli who hath a delicate frame like the streak of lightning. Thou art the Guru of Lord Siva, having taught Him the Pranavam.

Due to my three-fold lasting attachments to my wife, children and wealth, I am born again and again in this (illusory) world, taking the seven kinds of birth (i.e. Devas, human beings, beasts, birds, creeping reptiles and insects living beings in water and plants). Pray enlighten me enable me to get rid of this ceaseless cycle of Births and Deaths

சொற்பிரிவு; மாஏழ் சனனம் கெட மாயைவிடாமூ ஏடணை என்று முடிந்திடுமோ கோவே குற மின் கொடிதோள் புணரும் தேவே சிவசங்கர தேசிகனே.

பொழிப்புரை: எல்லா உலகங்களுக்கும் அரசனாய் விளங்குபவனே: குறவர் குலப் பாவையின் தோளைத் தழுவும் தெய்வமே! சிவபெருமானுக்கு உபதேசம் செய்த குருவே பெரிய ஏழு வகையான பிறவிகளும் அடியோடு அழியும்படி மாயையி னின்று நீங்காத மூன்று கொடிய ஆசைகளும் என்றுதான் என்னைவிட்டுப் பிரிந்து போகுமோ.

ஏழ் சனனம்: ஏழு பிறப்புக்கள்: மனிதர் தேவர் விலங்கு பறவை, நீர்வாழ்வன, தாவரம், ஊர்வன.

'மூவேழ் சுற்றமும் முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி
— போற்றித்திருவகவல்

மூவேடணை: மண், பெண், பொன் ஆசைகள், இவை மூன்றும் நீங்கினால் இன்பம் உண்டாகும். ஏஷணை ஏடணை என்று வந்திருக்கிறது. ஏடணை: ஆசை

"மண்ணாசை பட்டேனை மண்ணுக்குப் போட்டதடா
பொன்னாசை பெண்ணாசை போகேனே யென்குதே"
— பட்டினத்தார்



"தோன்றாசை மூன்றும் தொடர்ந்து வந்து சுற்றாமல்
ஊன்றாசை வேரையடி யூடறுப்பது எக்காலம்"
- பட்டினத்தார்

மாயை விடா: இவ்வுலகில் நிலையற்ற வாழ்வை நிலையுள்ள வாழ்வாகவே கருதி இறைவன் அருளைப் பெறாமல் ஆன்மாக்கள் மாயை விட்டு நீங்காத வரையில் பிறந்து இறந்து கொண்டு இருக்கின்றன.

மின்கொடி: மின்னற்கொடிபோல நுடங்கும் இடையுடையவள்.
"குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின்"
– திருமுருகாற்றுப்படை 101

தேவா: தெய்வமே

சிவசங்கர தேசிகனே: பரமசிவனுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்த குருவே.

மா: பெரிய

இந்த ஏழு வகையான பிறப்பிலும் எண்ணற்ற வகையான யோனி பேதங்கள் உண்டு.

"உரை சேரு எண்பத்து நான்கு
நூறாயிரமாம் யோனி பேதம்
நிரை சேரப் படைத்த வற்றின்
உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான்"
– சம்பந்தர்

கோவே: எல்லா உலகங்களுக்கும் தலைவனே. நான்கு பெரிய தெய்வங்களையுடைய நல்ல நகரங்கள் நிலைபெற்ற உலகத்தைப் பாதுகாக்கும் ஒப்பற்றவோர் தொழிலையே விரும்பிய உறுதியுடையவன்.

"நால் பெரு தெய்வத்து நல் நகர் நிலை இய
உலகங் காக்கும்ஒன்றுபுரி கொள்கை."

திருமுருகாற்றுப்படை 160 – 161

40. வினையோ டவிடுங் கதிர்வேல் மறவேன்
மனையோ டுதியிங் கிமயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோ டுதிரிந் தவனே.

My Lord ! Thou did'st move about with Thy consort Sri Valli at the sweet springs, the bubbling water-falls and the green fields of Thinai crops in Vallimalai (the birth-place of Sri Valli). I can never forget Thy radiant Vel with which Thou hath driven out the dark and dismal effects of my acts (Karma). Should I still struggle and languish with my wife and family in this weary existence ? Pray save me !

சொற்பிரிவு : *வினை ஓடவிடும் கதிர் வேல் மறவேன் மனையோடு இயங்கி மயங்கிடவோ சுனையோடு அருவித் துறையோடு பசும் தினையோடு இதணோடு திரிந்தவனே.*

பொழிப்புரை : *சுனையினிடத்தும் அருவிகளின் துறைகளிடத்தும் பசுமையாகிய தினைப் புனத்திலும் பரணிடத்திலும் திரிந்தவனே ! ஆன்மாக்களின் இரு வினைகளும் ஓடும்படி செலுத்துகின்ற கதிர்வேலை ஒருபோதும் மறக்கமாட்டேன். உன் ஞான வேலைத் தியானிக்கும் என்னை மனைவியோடு இல்வாழ்க்கையில் அல்லற்பட்டு மயங்கித் திரியும்படி விட்டு விடலாமா ?*

வினை ஓடவிடும் கதிர்வேல் : *ஆன்மாக்களின் இரு வினைகளும் அஞ்சி ஓடும்படி செலுத்துகின்ற பிரகாசம்பொருந்திய முருகப் பெருமானது கையிலுள்ள வேல் ஞானமாதலின் வினைகளைப் போக்க வல்லது.*

மனை : *வீடு. நான் மனைவி மக்களுடன் கூடி மயங்கலாமோ.*

சுனை : *மலைகளிலுள்ள நீர் ஊற்று.*

அருவித்துறை : *உயர்வாகிய மேலிருந்து கீழ்நோக்கி விழுகின்ற அருவியிற் குளிக்கும் துறை.*



இதண் : *பரண். பக்குவ நிலை அடைந்த ஆன்மாவாகிய வள்ளியை ஆட்கொள்ள எம்பெருமான் சுனையிலும் அருவியிலும் தினைப்புனத்திலும் தேடித்திரிந்தார்.*

வேல்மறவேன் :

*"சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல் விரித்தோனை விலங்கல் வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப்போது மறவாதவர்க்கு ஒரு தாழ்வில்லையே*

- அலங். 7

*" சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாயம் ஒருநாளுமில்லை "*

— ஔவையார்

மனையோடு தியங்கி மயங்கிவிடவோ : *கதிர்வேலை மறவான் அடியேன் இல்வாழ்வில் மயங்கவோ ?*

சுனையோடு அருவித்துறையோடு பசுந்தினையோடு இதணோடு திரிந்தவனே ! *ஓடு உருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில்வந்தது.*

*" கூட்டணி முரலு நீலக் குண்டு நீர்ச் சுனைகள் யாண்டுங்
காட்டிய பிறங்கல் யாருங் காணுற வள்ள லீண்ட வேட்
டுவர் சிறுமிக்காக மேவுதல் காண்ப னென்னு நாட்ட
மெய்ம் முழுதும் பெற்று நண்ணிய தன்மை போலாம்.*

- வள்ளி திருமணப் படலம்

*சுனைகள் கண்களை ஒப்பன.*

41. சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னோபதே சிகனே.

Oh my Lord Muruga with the garland of victory ! Thou art the Gnana Yogi and the Preceptor of the Pranava mantra to Lord Siva.

When I have the pangs of death-struggle, pray save me from the clutches of Yama; release me from the Jaws of Death and keep me at Thy blissful Divine Feet; Save me save me at that crucial moment, My Lord !

சொற்பிரிவு : வாகா முருகா மயில்வாகனனே யோகா சிவஞான உபதேசிகனே நமனர் கலகஞ்செயும் நாள் சாகாது சரணங் களில் எனே காகா. .

பொழிப்புரை : அழகுடையவனே ! முருகா ! மயில்வாகனனே ! பரம யோகியே ! சிவபெருமானுக்கு ஞான மொழியை உபதேசித்தவனே ! யமன் என் உயிரைக் கொண்டுபோவ தற்காக என்மேல் பாசக் கயிற்றை வீசி எறிந்து கலகம் செய்யும் வேளையில் அடியேன் இறவாதபடி உமது திருவடி யில் எனை வைத்துக் காத்து அருளல் வேண்டும்.

சாகாது : சாவாது. சாகாதெனை மருவிற்று ஏனையோரைப் போல் இறந்து மறைந்து போகாமல் பேரின்ப வீட்டை அருளல் வேண்டும்.

முருகன் அடியார்கள் பெறுவது என்றைக்கும் மாறுத விடுதலை, எஞ்சியோர் பெறுவது சிறைமாற்றம் போன்றது.

சரணங்களிலே : திருவடிகளிலே.

காகா : காப்பாற்றுக, காப்பாற்றுக. அடுக்குத் தொடர்.

கலகம் செயுநாள் :

இயமனை நோக்கி இறைவன் இயம்புவது :

“ போற்றிடு தருமனைப் புராரி நோக்கியே
சாற்றிடு கின்றனன் தயங்கு கண்டிகை
நீற்றோடு புனைந்தெமை நினையும் நீரர்பால்
கூற்றுவன் யான் எனக் குறுகுவாயலை ”

திருநீறு உருத்திராக்கம் அணிந்து எம்மை நினையும் அடி யார்களிடம் நீ செல்லாதே.

வாகா : வா + கா, வா : வந்து. கா : காத்தருள். வாகு : அழகு வாகனன் : அழகுடையவன் என்றும் பொருள்படும்.

உயிர் நீங்கியதும் உடலைத் தகனம் செய்து விடுவார்கள். உடலின்றி உயிர் ஒரு கருமத்தையும் செய்யாது. ஆகவே உயிர் உடலோடு கூடியிருக்கும் காலத்தையே சத் கருமங் களைச் செய்து இறைவனை இடையறாமல் துதித்துவந்தால் யமன் வரும்பொழுது இறைவன் தோன்றி “ அஞ்சாதே ” என்று ஆட்கொள்வார்.



“ சாவாமே காத்தென்னை யாண்டாய் போற்றி ” — அப்பர்

முருகப்பெருமானுடைய தொண்டர் இயமனுக்கு அஞ்சார்

“ மாகத்தை முட்டி வரும் நெடும் கூற்றவன் வந்தால்
தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய் ” [என் முன்னே
- அலங். 80

எமதர்மன் வந்து வாவா என்று அழைக்கும் வேளையில் ‘வரமாட்டோம்’ என்று கூறச் சிவபெருமானுக்குப் பிர ணவப் பொருளை உபதேசித்த முருகக் கடவுளின் தொண்டர் கூட்டத்தில் சேருங்கள்.

சிவஞானோபதேசிகனே : சிவபெருமானுக்கும் அகத்தியர் முதலா னோர்க்கும் பக்குவ ஆன்மாக்களுக்கும் குருவடிவாய் வந்து உபதேசிப்பவனே ! னோ என்பது குறுக்கல்.

நமனர் : இயமன், மரணத்துக்கு அதிகாரியும் நரகத்துக்கு அர சனும், தெற்குத் திசையில் இருந்து வருபவனுமாம்.

42. குறியைக் குறியா துகுறித் தறியும்
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே.

My Lord ! Thou art our Kumaresan with Thy incomparable Vel representing wisdom ! The very moment I had Thy divine Initiation of the Supreme Goal which transcends the Vedas, Mind, Word and Deed and which overcomes worldliness, I have come to realise, beyond doubt, the End and Aim of Life, as a result of which my worldly attachment, vain talks and thoughts, the futile knowledge of the external world and the ignorance of the innate Greatness of the soul have all vanished in no time !

சொற்பிரிவு : குறியை குறியாது குறித்து அறியும் நெறியை தனிவேல் ஐ நிகழ்த்திடலும் செறிவு அற்று உலகோடு உரை சிந்தையும் அற்று அறிவு அற்று அறியாமையும் அற்றது.

பொழிப்புரை : தியானித்த பொருளையன்றிப் பிறவற்றைப் (பசு ஞான பாச ஞானங்களால்) நினையாமல் அதனையே தியானித்துப் பதிஞானத்தால் அறியும் உண்மை வழியை ஒப்பற்ற வேலை ஏந்திய முருகப் பெருமான் குருவாக வந்து எனக்கு உபதேசித்த உடனே, உலகத் தொடர்பும் பேச்சும் மனமும் அறிவும் அறியாமையையும் அடியோடு நீங்கி விட்டன.

குறி : பரம்பொருளை நினைப்பதற்கு உரிய அடையாளம் திருஉருவம்.

குறியாது குறித்து : ஆலயங்களில் கல்லினாலும் செம்பினாலும் செய்யப்பட்ட உருவங்களையே பொருளாகக்கொண்டு வழிபடுவர். அவர்கள் அவ்வுருவங்களில் சாந்நித்தியமாய் அமர்ந்துள்ள மூர்த்தியை வழிபடுவதே ஞானத்துக்கு ஏதுவாகும். கல்லென்றுஞ் செம்பென்றுங் காண்பார்க்குக் கடவுள் எண்ணம் தோன்றாது. கடவுள் எண்ணம் உடையார்க்குக் கல், செம்பு எண்ணம் தோன்றாது. பொருள் அல்லாதவற்றைப் பொருளாகக் கொள்வோர் முத்தொழில் வயப்படுவர். மாறுதல் இல்லாச் சித்துப் பொருளைப் பொருளாகக் கொள்ளலே பிறவி நோய்க்கு மருந்து.

நெறி : வழி

தனிவேல் ஐ : ஒப்பற்ற வேலாயுதத்தையுடைய முருகக் கடவுள்

செறிவு : கலப்பு

மனம் வாக்கு காயங்களின் செயல் மாயா சம்பந்தம்.

அறிவு, அறியாமை உயிர்க்கு உரியவை.

நிகழ்த்திடல் : உணர்த்துதல்.

"அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே
யறிவுதனை யருளினா லறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகிற்
பிரியாத சிவன்றானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்லனாகி
நின்றென்றும் தோன்றிடுவன் நிராதாரனாயே."
- சித்தியார் 3 - 8 - 30



43. தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா அநுபூ திபிறந் ததுவே

Oh ! My Lord Muruga ! Thou art the Darling of Sri Valli with her pure pearl necklace and spotless garment. With the chisel of Thy beloved Grace towards me, the shackles of my ceaseless desires have been cut and crushed to pieces, as a consequence of which I have been blessed with the divine experience of the inexpressible Inward Bliss !

சொற்பிரிவு : தூசு ஆம் அணியும் துகிலும் புனைவாள் நேசா முருகா நினது அன்பு அருளால் ஆசா நிகளம் துகள் ஆயின பின் பேசாஅநுபூதி பிறந்தது.

பொழிப்புரை : குறமகள் காதலனே ! முருகப்பெருமானே ! அடியேனிடம் அன்பை விளைத்த நினது திருவருளால் அடியேனுடைய ஐம்புல ஆசையாகிய விலங்குகள் சிதைந்து கெட்டுப் பொடிப்பொடியாய்த் தொலைந்தபின்பு அடியேனுக்கு என்னவென்று சொல்லி வெளியிடமுடியாத ஒரு பேரின்ப அனுபவம் என்னுள் உண்டாயிற்று.

தூசாம் மணியுந் துகிலும் புனைவாள் : என்பதற்குத் தூய்தாகின்ற அணிகலனுந் துகிலுடையும் புனையும் வள்ளியம்மையென்ப பொருள் கொள்க. தூய்து என்பது தூசு என மருவி வழங்கும்.

நினது அன்பு அருளால் ஆசாநிகளம் துகளாயின : ஆசையாகிய விலங்கு தூளாவதற்கு முருகனுடைய அருள்வேண்டும். ஆசையில் அகப்பட்டு இருக்கும்காலம் விலங்கில் அகப்பட்டதுபோல் இருக்கும் என்கிறார். ஆசையானது நீங்க எல்லாத் தத்துவங்களுக்கும் பிறப்பிடமாயுள்ளமாயை ஒழிந்துவிடும்.

"ஆசை யறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்" - திருமந்திரம்

நிகளம் : மாட்டப்படும் விலங்கு.

பேசா அநுபூதி என்பதற்கு ஞானவரம்பாகிய மோன அனுபவம் எனவும் பொருள் கொள்ளப்படும்.

பிறந்தது : பிறக்கும் என்று சொல்லாமல் பிறந்தது என இறந்த காலத்தாற் கூறினர் நிச்சயம் பற்றி. இனி அடியார்கட்குப் பிறந்தது என்னுமல் அடியேனுக்குப் பிறந்தது எனப் பொருள் கொள்ளிற் பிறந்தது என்பது காலவழுவமைதி யன்று; வழா நிலையேயாம்,

'விச்சையிலராகந்தோன்றி வினைவழி போகத்தின்கண்
இச்சையைப் பண்ணி நிற்குந் தொழிலறி விச்சை மூன்றும்
வச்சயோ திச்சாஞானக் கிரியை முன் மருவியான்மா
நிச்சயம் புருடனாகிப் பொதுமையினிற்பனன்றே' -சித்தியார்

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
ஆங்கார முளையை யெற்றி
அத்துவித மதமாகி மதமாறு மாறுக
அங்கையின் விலாழியாக்கிப்
பாசவிருள் தன்னிழ லெனச்சுளித் தார்த்துமேற்
பார்த்துப் பரந்த மனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயை நூறித்
தேசு பெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக்கு ளேயடக்கிச்
சின் மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தி யான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகச மெனவ ளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே. - தாயுமானவர்

44 சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ?
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே

On my Lord Muruga with Thy sublime, singular and peerless Vel! Thy sacred fragrant Feet have adorned the heads of the Devas (freed from the tyranny of the vanquished Asuras) and the summit of the Vedas. Thy fragrant Feet



have also tread the hot forests and the fields of 'Thinai' crops (where Sri Valli had her watchful gaze to drive out the birds - symbolising the evils in us), Those sacred, fragrant Feet have also adorned my head to save me. Oh how boundless is Thy mercy which is beyond my power of expression !

சொற்பிரிவு : சாடும் தனிவேல் முருகன் கழல் வீடும் சுரர் மாமுடி வேதமும் வெம்காடும் புனமும் கமழும் சரணம் சூடும்படி தந்தது சொல்லுமதோ.

பொழிப்புரை : பகைவர்களை அழிக்கின்ற சமானம் அற்ற வேலை ஏந்தும் முருகப் பிரானுடைய திருவடிகள் மோக்ஷத்தினிடத்தும் தேவர்களின் அழகிய முடியிலும், வேதத்திலும் வெப்பான காட்டிலும், தினைப்புனத்திலும் கமழ்வது ஆகும். அத்தகைய திருவடியை அடியேனுக்குத் தலையில் சூடிக்கொள்ளும்படி கொடுத்து அருளிய திருவருட்செயல் யான் சொல்லும் அவ்வளவு எளிதோ ?

சாடும் : அழிக்கிற; இங்கே அடியார்களின் பிறவிப்பிணிப் பகைவர்களைச் சாடும் என்க.

வீடு : ஆன்மாக்களின் முத்தி தலம். சரணம் : திருவடியை அடியேன் சூடும்படியென்க.

வேதம் : இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்.

வெம்காடும் புனமும் : வள்ளியைத் தேடி உலாவிய இடங்கள்.

கழல்சூடும்படி : திருவடியை என் தலைமீது பொறிக்கும்படி.

கழல் : திருவடி; கழல் கமழும் என முடித்தல் வேண்டும் அக்கழல் எனச் சுட்டு வருவிக்க.

" நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
- அப்பர்

ஆனந்த மோனம் அருட்குருநாத
தன் பாதம் சென்னியில் வைத்தான்
- தாயுமானவர்

"பூவார் அடிச்சுவ டென் தலைமேற் பொறித்தலுமே"
திருத்தெள்ளேணம் 7

திருவடித் தீட்சையின் வல்லமையைக் கூறுகிறார்.

"அவன் கால் பட்டு அழிந்தது இங்கு என் தலைமேல்
அயன் கையெழுத்து"
- அலங் 40

அவரது திருவடித் தீட்சையினால் பிறப்பு நீங்கிற்று என்கிறார்.

சொல்லுமதோ: அனுபவத்தைச் சொன்னவர்கள் அதைக் கண்டவர்கள் ஆவர்களோ? அதைக் கண்டவர்கள் சொன்னவர்கள் ஆவர்களோ? யான் பெற்ற இன்பம் இன்னுமொருவருக்கு விளக்கிச் சொல்வதற்கு முடியவில்லையே! அது சொல்லுக்கும் அடங்காதே என்று வியப்புறுகிறார். அவர் கண்ட காட்சி:

"பத்தித் திருமுகம் ஆறுமுகம் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதம் கண்டேன்"
– அலங். 47

இறைவனது நன்றியை நினைப்பார்க்கு அவன்பால் அன்பு பெருகுதல் இயல்பு. அவ்வின்பந் துய்க்கும் ஆர்வத்தால் அடிகள் இறைவனது நன்றியை நினைத்து வியப்புறுகிறார்.

45. கரவா கியகல் வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோ கதயா பரனே.

My Lord! Thou art the ever young (Kumara) Gurumoorthy with Thy mighty Vajrayudam, riding on the elephant (known as Pinimukam). Thou art the Siva Yog! and the repository of all kindness and generosity!

May it please Thee to enlighten me on the Eternal Truth. Pray do not force me to beg for it from so-called Learned ones who hide it as an impartible secret lore.



சொற்பிரிவு: கரவு ஆகிய கல்வியுளார் கடைசென்று இரவா வகை மெய்ப்பொருள் ஈகுவையோ குரவா குமரா குலிசாயுதா குஞ்சரவா சிவயோக தயாபரனே.

பொழிப்புரை: பரமகுருவே! என்றும் இளையானே வச்சிரப் படையுடையான் மகளுக்கு மணவாளனே! சிவயோகத்தைப் பக்தர்களுக்குத் தரும் கிருபா மூர்த்தியே! நெஞ்சில் வஞ்சமாகத் தாம் கற்ற அறிவைப் பிறருக்குச் சொல்லாமல் ஒளித்து வைத்துக் கொண்டிருப்பவர் மனைவாயிலிற் போய் இரந்து நின்று இடருறுதபடி அடியேனுக்கு நீயே உண்மைப் பொருளை உபதேசித்து அருளல் வேண்டும் ஐயனே.

கடை: வீட்டு வாசல்

மெய்ப்பொருள்: கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி என்றார். மெய்ப்பொருளாவது மெய்ந் நூற் பொருள் என்றும் பரப்பிரமம் என்றும் கொள்ளலாம்.

குரவா: குரு சிவபெருமானுக்குப் பிரணவப் பொருளை விளக்கிக் காட்டியதனால் முருகன் 'சிவகுரு' எனவும் போற்றப் படுகிறார். அகத்தியருக்கும் நந்திதேவருக்கும் தசரத ராமனுக்கும், வாமதேவ முனிவருக்கும், நாரதருக்கும், பராசர முனிவர் புத்திரர் ஆறு பேர்க்கும் குருவாக வந்து உபதேசம் கொடுத்தபடியால் பரமகுரு என்ற பெயர் பெற்றார்.

கரவு: உள்ளது மறைத்தல்

குலிசாயுதம்: இரு ஆயிரம் நுனிகளை உடையவச்சிராயுதம். திண்ணிய பொருள் எதுவானாலும் உடைக்கும் வல்லமை உடையது. வைரத்தால் அமைந்தது.

குஞ்சரம்: யானை, குலிசாயுத. குஞ்சரவ: இந்திரன் மகள் தெய்வயானை கணவனே! பிணிமுகம் என்னும் யானை வாகனமுடையவனே என்றுமாம்.

" தேவகுஞ்சரி பாகா நமோ நம " - திருப்புகழ்

" குஞ்சரி குயம் புயம் பெறு, அரக்கருமாள் "
- திருப்புகழ்

" .................................மத கும்பகம்பத்
தறுகண் சிறுகண் சக்கிராம சயில சரசவல்லி
இறுகத் தழுவும் கடக பன்னிரு புயனே "
அலங். 67

மதம் பொழியும் மத்தகத்தையும் அசைவையும் அஞ்சா மையையும் சிறிய கண்களையுமுடைய ஐராவத யானையின் மகளாகிய இனிய குணத்தையுடைய தெய்வநாயகி இறுக அணைக்கும் மலைகளைப் போன்ற பன்னிரண்டு புயங்களை யுடையவரே !

ஈகுவையோ :
" இரப்பவர்க் கீய வைத்தார் ஈபவர்க்கருளும் வைத்தார்,
கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்."
- அப்பர்

தயாபரன் : தயா - அருள். தயாபரன் - மேலான திருவருளாளன்

46. எந்தா யுமெனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே.

My Lord! Thou art Kanda (the form acquired by the blending of the six Babes into one lovely divine child of six faces and twelve arms, by the fond embrace of Thy Mother). Thou hath the dazzling Vel with rays radiating the lustre of Wisdom. Thou art the beloved son of Goddess Uma - Thou art ever young and the supreme Authority of the Vedas.

Thou art my affectionate Mother and ever gracious Father. Pray cure me of my mental grief (caused by lust, anger, desires and other evil propensities).



சொற்பிரிவு : என்தாயும் எனக்கு அருள் தந்தையும் நீ சிந்தா குலம் ஆனவை தீர்த்து எனை ஆள் கந்தா கதிர்வேலவனே உமையாள் மைந்தா குமரா மறை நாயகனே.

பொழிப்புரை : கந்தப் பெருமானே ! பிரகாசிக்கின்ற வேலை ஏந்தியவனே ! அம்பிகைக்குப் புதல்வனே ! என்றும் இளைய வனே, நால் வேதங்களுக்கும் தலைவனே ! தாயும் நீ எனக்கு இரங்கி அருள் புரிகின்ற தந்தையும் நீ. அடியேனுடைய மனத்திலே உண்டாகும் கவலை எல்லாம் தீருமாறு செய்து என்னைப் பணிகொள்வாயாக.

மறை நாயகன் : வேதநூலும் அதனுட் கூறப்படும் வேள்விக ளும் தோன்றி நிகழ்வதற்குக் காரணமானவன்.

" வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு "
திருப்பொற்சுண்ணம் 20

என்தாயும் : தாயைக் குறிக்கும்போது என்தாய் என்றார். தந்தை யைக் குறிக்கும்போது, எனக்கு அருள் தந்தை என்றார் உடம்பிலும் உலகிலும் பற்று நீத்த அடிகளைத் தனக்கு ஞான புத்திரனுக்கிக் கொண்ட முருகனைத் தாய் தந்தை என்றார்.

" அப்பன் நீ அம்மை நீ ஐயனு நீ " - அப்பர்

" தாயு நீயே தந்தை நீயே சங்கரனே " - சம்பந்தர்

" அம்மையே அப்பா ஒப்பிலா மணியே " - மாணிக்கவாசகர்

" தாயும் நீ இன்பத் தந்தையும் நீ என்றால் " - தாயுமானவர்

அருணகிரிநாதர் நல்ல நெறியில் போய்க் கொண்டிராத மக்களைப் பார்த்து இந்திரியங்களின் வசப்பட்டுத் துன்பத்தை அடைகிறார்களே, இப்போது வருகிற இடையூறுகளை எல்லாம் தம்முடைய அறிவினாலே எவ்வாறு போக்கிக்கொள்வார்கள். யமதூதர்கள் வரும்போது இவர்கள் எதிர்த்து நிற்க என்ன செய்வார்களோ என்றதுதான் அவர் கவலை.

**47.** ஆறு றையுநீத் ததன்மே னிலையைப்
பேறு வடியேன் பெறுமா றுளதோ
சீறு வருசூர் சிதைவித் திமையோர்
கூறு வுலகங் குளிர்வித் தவனே.

My Lord! Thou with Thy matchless mighty Vel killed Surapadma who had come in fury to fight with Thee.

Thou satisfied the Devas by redeeming Devaloka and conferring on their land peace and happiness. Pray bless me to attain soon the highest of spiritual attainments. Makhi (Salvation) by discarding one by one as not mine, the thirty six Thathwas (which are but the steps of the ladder to such attainment).

சொற்பிரிவு : ஆறு ஆறையும் நீத்து அதன் மேல் நிலையை பேறு ஆ அடியேன் பெறும் ஆறு உளதோ. சீறுவரு சூர் சிதை வித்து இமையோர் கூறு ஆ உலகம் குளிர்வித்தவனே.

பொழிப்புரை : சீறி வந்த சூரபன்மனை அழியச்செய்து தேவர் கட்கு உரிய பங்காகும்படி அவ்வுலகைக் குளிரச்செய்தவனே! தத்துவங்கள் முப்பத்தாறனையும் தாண்டி அந்நிலைக்கு மேலாகிய உயர்ந்த முத்தி நிலையைப் பயனாகப் பெறும் வழி அடியேனுக்கு உண்டோ.

ஆறு ஆறு : 36 தத்துவங்கள் ; ஆன்ம தத்துவங்கள் 24 வித்தியா தத்துவங்கள் 7. சிவ தத்துவங்கள் 5

" நாலாகு வேத நூலாக மாதி
நாஞேதி னேனு மிலே " வீணே
நாள்போய்வி டாம லாறுறு மீதில்
ஞானுப தேச மருள்வாயே
— திருப்புகழ்

நீத்து : தள்ளி, தாண்டி, கடந்து.

அதன் மேல் நிலை : முத்தி நிலை, சாயுச்சிய நிலை.

பெறும் ஆறு உளதோ : பெறும் வழி உண்டோ.

சீறு வரு : கோபித்து வந்த.



சூர் : சூரபதுமன்

கூறு ஆ : அமராவதியை அமரர்க்கு உரிமைக் காணியாகக் கொடுத்து.

குளிர்வித்தவனே : மகிழ்வித்தவனே !

சிதைவித்து : அழியச் செய்து.

அசுரரால் வந்த துன்பத்தினாலே இந்திரன் அமராவதியை விட்டோடி ஓடிச் சீர்காழியில் ஒரு மூங்கிலுக்குள் ஒளித்திருந் தான். சூரபன்மன் அமராவதியைக் கைப்பற்றிக்கொண்டு தேவர்களைச் சிறையில் அடைத்தான். இந்திராணி அஞ்சி மகாமேரு மலைக்குச் சென்று ஒளிந்துகொண்டாள். முருகப் பெருமான் சூரசங்காரம் செய்து அமராவதியை மீட்டுத் திருப்பித் தேவர்கட்குக் கொடுத்தார்.

48. அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறுவே லவனே.

My Lord Velava! Thou hath Thy holy abode in the hearts of the enlightened elevated souls who have, with their bright light of wisdom, dispelled the darkness of the Ego (in them) which emanates from worldly attachments due to the feeling of 'I' and 'Mine'!

Pray rid me of my Jeevabotham and bless me with Sivabotham by enabling me to realise Thee in the All-pervading Brahman the sole and single Divinity!

சொற்பிரிவு : அறிவு ஒன்று அறநின்று, அறிவார் அறிவில் பிறிவு ஒன்று அறநின்ற பிரான் நீ அலையோ, செறிவு ஒன்று அறவந்து இருள் சிதைய வெறி வென்றவரோடு உறும் வேலவனே.

பொழிப்புரை : உலகத்தோடு இருக்கும் தொடர்பான உறவுகள் அற்றுப் போகும் நிலை வந்து, அஞ்ஞான இருள் ஒழியும்படி

*மாயா மயக்கத்தை வென்ற மெய்ஞ்ஞானியரோடு ஒன்று பட்டுத் தங்கியிருக்கும் பெருமானே! சிவபோதம் ஆகிய ஒன்று நீங்க, சிவபோதத்தால் அறிகின்றவர்களுடைய அறிவில் அத்துவிதமா நின்ற பிரான் நீ அல்லவா ?*

அறநின்று : சிறிதும் நிகழாதொழிந்து.

பிறிவு : பிரிவு

செறிவு : உலக பந்தபாசத்தால் நெருக்கமான உறவுகள்.

இருள் சிதைய : அஞ்ஞானம் கெட ( ஆணவ மலம் )

வெறிவென்றவர் : " காமம் வெகுளி மயக்கம் " என்பவற்றை வென்ற ஞானிகள்.

" காமமொடு கடுஞ்சினங் கடிந்த காட்சியார் "

-திருமுருகாற்றுப்படை 135

உறும் : தங்கியிருக்கும்

பிறிவு ஒன்று அற : பிறிவாகியது நீங்க. அத்துவிதம்.

" பிறிவறியா அன்பர் நின் அருட்பெய் கழல் தாளிணைக்கீழ்
மறிவறியாச் செல்வம் வந்து பெற்றார் "

– அடைக்கலப்பத்து 9

" சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்துறையும் "

– திருமுருகாற்றுப்படை 62 - 63

புலம் பிரிந்து உறையும் அடி : தம் அறிவு ஐம்புலன்களி னின்றும் பிரித்து மெய்ஞ்ஞான உணர்வுகொண்டு அன்பர் தங்குந் திருவடி.



49\. தன்னந் தனிநின் றதுதான் அறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையுங் கிருபைசூழ் சுடரே.

My Lord! With Thy sparkling Vel radiating like the rays of the Sun! Thou always doth good to those who adore Thee. Thou art the Effulgent Light banishing the darkness of sorrows of Thy beloved devotees.

One can (like me) realise the divine experlence of the subtle feelings of separtion from his body and senses and the blissful state of his detatched inner-self! But how can he explain the this and convince others by mere words?

சொற்பிரிவு : தன்னந்தனி நின்றதுதான் இன்னம் ஒருவர்க்கு அறிய இசைவிப்பதோ மின்னும் கதிர்வேல் விகிர்தா நினைவார் கின்னம் களையும் கிருபை சூழ் சுடரே.

பொழிப்புரை : ஒழிமிக்க அழகிய செங்கதிர்போலப் பகை இருள் கெடுத்த வேலாயுதனே! பல வித கோலம் கொண்டு உயிர்களை மகிழ்விக்கத் திருவிளையாடல் செய்யும் அழகனே! நின்னையே தியானம் செய்யும் அடியார்களின் துன்பத்தைத் தொலைக்கும் அருள் நிறைந்த அறிவொளியே! தன்னம் தனியாக ( என்னை விழுங்கி ) நின்ற நிலையை அறியும் வண்ணம் இன்னமும் ஒருவர்க்கு இத் தன்மைத்தென்று அறியும் படி கூறி அவரை உடன்படுவித்தல் கூடுமோ ?

தன்னந்தனி :

எனதென் பதும் போய் யானென்பதும் போய்
எல்லாமி றந்த விடங்காட்டும் நின
தென்ப தும்போய் நீயெனல் போய் நிற்கு
நிலைக்கே நேசித்தேன்.

– தாயுமானவர்

கருவி கரணங்களை விட்டுப்பிரிந்த பக்குவநிலை ஆன்ம தத்துவக் கூட்டங்களைவிட்டுத் தனித்து நிற்பதுகண்ட குருநாதன் ஆன்மாவை ஆட்கொண்டான்.

மின் அம் : ஒளி வீசுகின்ற, அழகிய.

விகிர்தம் : வேறு வேறு வடிவங்கொண்டு உயிர்களை மகிழ்விக்கச் செய்தல்.

கின்னம் : துன்பம்.

" கின்னங் குறித்து அடியேன் செவி கேட்கச் சொன்னகுணம் "

அலங். 24

களையும் : போக்குகின்ற.

50. மதிகெட் டறவோ டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திரஞா னசுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே.

My Lord ! Thou art the foster son of Ganges. Thou art the personification of blissful wisdom and the Giver of the fruits of that wisdom. Thou valiantly put an end to the pride of the sons of the lady called Thaiyithi, Due to my ignorance. I have gone astray from the path of Righteousness and I am in dismal despair, on the verge of ruin. Pray, save me from this sad plight !

சொற்பிரிவு: " மதி கெட்டு அற வாடி மயங்கி அறக்கதி கெட்டு அவமே கெடவோ கடவேன் நதிபுத்திர ஞான சுக அதிப அத் திதிபுத்திரர் வீறு அடு சேவகனே.

பொழிப்புரை : கங்கை ஆற்றின் காதல் மகனே ! பேரறிவு பேரின்பங்களைத் தக்கார்க்கு வழங்குந் தலைவனே ! அவுணரது பெரும் செருக்கினை அழித்த வீரனே ! அறிவழிந்து மிக வாட்டம் உற்றுத் திகைத்து யான் பெற வேண்டிய மறுமையும் வீடு பேறுமாகிய பேறு வீணாக அழிந்து கெட்டுப்போவதற்கோ உரியேன்.

மதி : புத்தி.

அற : மிகவும்



அறக்கதி : அற நெறியால் பெறும் பேறு.

அவமே : வீணாக

கெடவோ கடவேன் : கெடக் கடவேனோ எனினும் அமையும்.

நதி புத்திர : மந்தாகினி தந்த வரோதயனே (33). கங்கா நதி பாலா (34).

ஞான சுக அதிப : ஞானத்திற்கும் அதனால் வரும் சுகத்திற்கும் தலைவனே.

திதி புத்திரர் : திதியின் மக்கள் : அசுரர்கள்.

வீறு : செருக்கு.

அடு : போக்கிய.

சேவகன் : வீரன்.

51. உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.

My Lord ! Thou art the Tangible World (the effect) and the illusory Maya (the cause) the Existing (Divine Entity) and the Non-Existing (Ephemeral Mirage)-the sweet smell and the flower giving the smell, the precious Gem and its dazzling brilliance, the body and the soul therein. Thon are the Goal of Life (ile. Mukthi-Thy Feet) and the means to achieve it (by surrendering totally at Thy Feet) !

My Lord Kuga-dwelling in the cave of my heart ! Appear before my humble self as my beloved Guru and bless me with all Thy sublime Sweet Grace !

பொழிப்புரை : குகனே ! (நீ என் போன்றவர்களை ஆட்கொள்ளுதற் பொருட்டு) உருவமும் அருவமும் போலவும், உள்ள பொருளும் இல்லாத பொருளும் போலவும், மலரும்

அதன் மணமும் போலவும், மணியும் அதன் ஒளியும் போல வும் கருவும் அதனுடனுள்ள உயிரும் போலவும், பிறப்பும் அதற்கு ஏதுவான ஊழ் வினையும் போலவும், குருவும் அருளுமாய் வருகின்றாய்.

அத்தகைய வடிவினையுடைய நின்னை நான் வணங்கி நினைத்து வழிபட்டு நினது திருவருள் பெற்று உய்ந்தேன்.

உருவாய் அருவாய் : உருவம் அருவமாகும். அருவம் உருவமா கும். அதுபோலத் திருவருள் குருவாய் வரும் ; குரு திரு வருளாய்த் தோன்றும்.

"அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட"
- திருக்கோத்தும்பி 14.

"அருவாய் உருவமும் ஆயபிரான்"
- திருத்தெள்ளேணம் 2

நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே

"பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ"
திருத்தோணோக்கம் 5.

உளதாய் இலதாய் : உள்ளபொருள் ஒருபோதும் இல்லாத பொருளாகாது. அவ்வாறே இல்லாத பொருளும் உள்ள பொருளாகாது. அதுபோலத் திருவருள் குருவின்றித் தோன்றாது குருவடிவும் திருவருளின்றித் தோன்றாது.

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான் எனதென் (று) அவர் அவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.
திருச்சதகம் 15.



மருவாய் மலராய் : மலரிடம் மணமுண்டாகும்; மணத்தின் காரணமாக மலர் விரும்பிச் சூடப்படுகிறது. அதுபோலக் குருவினிடம் திருவருள் உண்டாகும். திருவருளாற் குரு வணங்கப்படுவான்.

"நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே.
– சிவபுராணம் 44

மணியாய் ஒளியாய் : குருவாகிய மணியிடம் திருவருளாகிய ஒளி வீசும்.

மணி : மாணிக்கம்.

"பொன்னானாய் மணி யானாய் போக மானாய்
பூமிமேற் புகழ்தக்க பொருளே."
– அப்பர்

இவ்வுலகிலே எனக்கு இன்பத்தைத் தருகிறது. பொன் என்றால் அந்தப் பொன்னாகவே நீ இருக்கிறாய். இன்பத் தைக் கொடுப்பது மணி என்றார் அந்த மணியாகவே நீ இருக்கிறாய். எவ்வாறு புகழ்வேன்.

"நாயகன் கண்ந யப்பால் நாயகி புதைப்ப எங்கும்
பாயிருள் ஆகிமூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
தூய நேத்திரத்தினாலே சுடரொளி கொடுத்த பண்பின்
தேயமார் ஒளிகள் எல்லாஞ் சிவனுருத் தேசதென்னார்."
- சிந்தியார் 12 – 24.

கருவாய் உயிராய் : தாயின் வயிற்றுள் இருக்கும் கருவும் கருவி னுள்ளிருந்து வெளிப்படும் உயிரும் போலக் குகனிடம் இருக்குந் திருவருளிலிருந்து குருவடிவம் வெளிப்படும்.

கதியாய் விதியாய் : ஊழ்வினை பிறப்புத் தரும். பிறப்பினால் ஊழ்வினையின் தன்மை புலனாகும். அதுபோலக் குகனது திருவருள் குருவாய் வரும். அக்குருவினிடத் திருவருட் செயல் புலனாகும்.

விதி : விதியாயும் அதனால் பெறும் பயனாயும் நிற்றல்.

'விதியாய் விளைவாய் விளைவின் பயனாகி' - சம்பந்தர்

குருவாய் வருவாய் அருள்வாய் : குருவாய் அருள்செய்ய வருவாய். திருவருட் செயலாவது குகன் குருவாய் வந்து பக்குவம் அடைந்த ஆன்மாக்களுக்கு வீடுபேற்றின்பத்தை நுகர்வித்தல்.

வருவாய் : ஏவலன்று.

"தம்முதல் குருவாய்த் தவத்தினில் உணர்த்த"
- சிவஞானபோதம் 8

"குருவே சிவம் எனக் கூறினன் நந்தி"
- பண்டார மும்மணிக் கோவை

"நிலந்தன்மேல் வந்தருளி நீள் கழல்கள் காட்டி"
- சிவபுராணம் 59

உயிர்கட்கு உள்நின்று உணர்த்தி வந்த பரம்பொருளே பருவம் அறிந்து குரு மூர்த்தமாய் எழுந்தருளி வந்து அதனை அறிவுறுத்தும்.

"அருபரத் தொருவன் அவனியில் வந்த குருபரன்
ஆகி அருளிய பெருமை"
- போற்றித்திருவகவல் 75

குகன் : மலைக் குகைகளில் கோயில் கொண்டிருப்பவன். உயிர்களின் இதய கமலங்களில் எழுந்தருளியிருப்பதனால் வந்த பெயர்; தன் இதயக் குகையில் இருக்கும் முருகப் பெருமான் குருவாக வந்து அருள் செய்தானென்று அடிகள் அவனது நன்றி நினைந்து உணர்த்தி மகிழ்கின்றார்.

அருணகிரிநாதர் முருகனிடம் இம்மை மறுமைப் பேறுகளை வேண்டாது வெறுத்து மெய்யுணர்வும் வீடுபேறுமே வேண்டி அப்பெருமானைப் பாடிப் பரவுதலை நோன்பாகக் கொண்டார்.



முன்கேட்ட வேண்டுகோளின்படி, அடிகள் தன் மனத்தைக் குஞ்சமாக அமைத்து, அன்பு எனும் நூலினால் தொடுத்து, சொல்லும் பொருளும் தூய மணம் வீசும் அற்புதமான அலங்கார பாமாலையைக் 'குகனே' என்று முடித்தார். இவை வாடாது அணிகளாய் விளங்குகின்றன என்றும் விளங்கும்.

"கந்தர் அநுபூதி பெற்றுக் கந்தர் அநுபூதி சொன்ன
எந்தை அருள் நாடி இருக்கும்நாள் எந்நாளோ"
- தாயுமானவர்

அருணகிரிநாதர் திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

முற்றும்.






கலியுக வரதனும்
கதிர்காமக் கந்தனுக்கு
சமர்ப்பணம்.

